REGD. NO. M. 4392













## நீங்களும் கிப்ஸ் உபயோகிக்கிறீர்களா?

சாம்பல், கரி, இவைபோன்ற இதர கரகரப்பான பல்துலக்கும் வஸ்துக்கள் பற்களுக்கும் ஈறுகளுக்கும் ஹானி விளைவிக்கக்கூடும். நுரைபோல் மிருதுவான கிப்ஸ் டென்டிபிரிஸ் பற்களுக்கோ அல்லது ஈறுகளின் மிருதுவான பாகங்களுக்கோ ஒருபோதும் கெடுதல் செய்வதில்லை. கிப்ஸ் நீங்கள் எப்பொழுதும் ஒழுங்கான பற்களைப்பெற உதவுகிறது. வாய்க்கும் சுவாசத்திற்கும் புதுமணத்தை அளிக்கின்றது. மேலும் அதன் 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகளில் எதை தேர்ந்தெடுத்தாலும் உபயோகிக்க மிகவும் சௌகரியமாயிருக்கும்.




# கிப்ஸ் டென்டிபிரிஸ்

ஒழுங்கான முறையில் பற்களை வெண்மையாக சுத்தம் செய்கிறது

விலையோ சொற்பம் — பலநாட்கள் நீடித்துவரும்

GD. 31-178 TM

# இரட்டிப்பு ஆகாரம்



குழந்தையின் வளர்ச்சி அவனுடைய ஆயுட்காலம் பூராவும் இருக்கும் சரீரத்தின் அமைப்பை ஸ்தாபிக்கின்றது. அதனால்தான் ஓர் தாயானவள், எந்த ஆகாரங்கள் குழந்தை பிறப்பதற்கு முன்னும் மற்றும் அவனுக்குப் பாலூட்டி வரும்பொழுதும் குழந்தைக்குத் திடகாத்திர வளர்ச்சியைக் கொடுக்குமோ அந்த ஆகாரங்களை முக்கியமாகச் சாப்பிடவேண்டும். தற்சமயம் கிடைக்கும் உணவுப்பொருள்களில், உடல்வளர்ச்சிக்கு அத்தியாவசியமான விடமின்கள் விசேஷமாகக் குறைந்திருக்கின்றன. ஆதலால், ஓர் தாய் அதிகப்படியான விடமின்களை உட்கொள்ளாவிடில், அவளுடைய குழந்தை நோஞ்சானாகப் பிறந்து அதைப் பராமரிப்பதற்கு மிகச் சிரமமாக இருக்கும். எம். ஜி. பி. (மெட்ராஸ் கவர்மெண்ட் பிராண்ட்) ஷார்க் லிவர் ஆயிலில் ஓர் ஆளின் நித்திய தேவைக்கு அத்தியாவசியமான பூர்ண அளவு A & D விடமின்கள் நாளொன்றுக்கு ¼ அணா செலவில் கிடைக்கும். ஓர் குழந்தைக்கு ⅛ அணா செலவில் நித்தியமும் தேவையாயுள்ள இந்தப் பாதுகாப்புச் சத்துப்பொருள்கள் கிடைக்கும்.

## மெட்ராஸ் கவர்மெண்ட் பிராண்ட்




## ஷார்க் லிவர் ஆயில்

ஒரு ஆளுக்குச் செலவு : நாளொன்றுக்கு ¼ அணா.

**அ ட மி ன்**

மெட்ராஸ் கவர்மெண்ட் பிராண்ட் ஷார்க் லிவர் ஆயிலிலுள்ள கொழுப்புகள், வெண்ணையைவிட ஜீரண சக்தியுடைய சுலபத்தில் சிறந்த கேகளின் ஜீரணத்தை மீறி பாதிக்காது. அப்படியானும், மூடி சாரமுள்ள அடமின் கொடுக்கவும், தினம் சில துளிகளே தேவை; அது எக்கிதயான நோத்தவும் கொடுக்காது.

- விடமின் 'A' :— உடல் வளர்ச்சிக்கும் வலிமைக்கும் சாதகமானது. ஜலதோஷம், இன்ஃப்ளுயன்ஸா, நீர்க்கோவை, கண் நீர்க்கட்டு முதலிய நோய்களைத் தடுத்து—வெட்டுக்காயம் பிருண்டிய காயம் இவைகளிலிருந்து விஷம் பரவாமல் பாதுகாக்கின்றது.

- விடமின் 'D' :— கணைச்சூட்டைத் தவிர்க்கிறது. உறுதியான எலும்பு, பற்கள் வளர்ச்சிக்கும் சமைக்கும் இன்றியமையாதது.

கொழுப்புகள் :— விடமின்களை பூர்ணமாய் ஜீரணிக்கத் தேவையானதும், அதிகப்படி சக்தியை கொடுப்பதற்காகவும் வேண்டிய அளவு உடலில் கொண்டுள்ளது.

தயாரிப்பாளர்கள் :—

## கவர்மெண்ட் ஆயில் பேக்டரி, கள்ளிக்கோட்டை.

டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் & காமர்ஸ்

## கவர்மெண்ட் ஆப் மெட்ராஸ்

தென் இந்தியாவுக்கு விநியோகஸ்தர்கள்

பார் & கோ., லிட்., மெட்ராஸ்.

MTA'S-GO 8 B — TAMIL

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Gardens, Poonamallee High Road, Kilpauk, Madras

# அக்ரிகோ கருவிகள்




மண்வெட்டிகள்



மண்வாரிகள்



கட்டப்பாரைகள்




இருதலை கோடாலிகள்




**தி டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பெனி லிமிடெட்.**

தலைமை சேல்ஸ் ஆபீஸ்:

**23 B, நேதாஜி சுபாஷ் ரோட், கல்கத்தா.**




முதலிடுங்கள்

## நாஷனல் ஸேவிங்ஸ் ஸெர்டிபிகேட்களில்

இவை தபாலாபீஸ்களிலும், அதிகாரம் பெற்ற ஏஜெண்டுகளிடமும் (நியமிக்கப்பட்டிருக்கும் இடங்களில்), ஸேவிங்ஸ் பீரோக்களிலும் கிடைக்கும்.

புது டில்லி இந்திய சர்க்கார் நிதி மந்திரி இலாகாவால் வெளியிடப்பட்டது.

AC 74TM




# எண்ணெய் ஸ்னானத்தின் மிக மேலான முறை

உங்கள் சர்மத்தின் மிகவும் அடியில் இருக்கும் பாகங்கள் எண்ணெய் ஸ்னானத்தால் சுத்தம் செய்யப்பட்டு மிருதுவாக்கப்படுகின்றன. ஒரு வகையாகத் தயாரிக்கப்பட்ட சோப்பு அதைப் போல் நன்றாக உபயோகப்படுகிறது. ஏனென்றால் அதில் வழக்கமாக சோப்பிலிருக்கும் நிரப்பும் பதார்த்தங்கள் இல்லை. கேரளா சோப்பைப் பளுவாக்குவதற்கென்று அன்னிய பதார்த்தங்கள் எதுவும் சேர்க்கப்படுவதில்லை. அது சுத்தமானது. அதனால் தான் அது நன்றாக நுரை உண்டு பண்ணுகிறது. மேலும் குளிர்ந்த ஜலத்திலுங்கூட நன்றாக சுத்தம் செய்கிறது.




**வில்லிங்டன்**

கவர்மெண்டு ஹவுஸில் ஒரு பெரிய சீமாட்டிக்கும் அவள் விருந்தாளிகளுக்கும் செய்யப்பட்டது.

**கேரளா ஸோப் இன்ஸ்டிட்யூட், கள்ளிக்கோட்டை**

டிபார்ட்மெண்ட் ஆப் இண்டஸ்ட்ரீஸ் அண்டு காமெர்ஸ்

**கவர்ன்மெண்ட் ஆப் மெட்ராஸ்**

GSTA'S—ES T B- TAMIL

# உங்கள் (தேக) ஆரோக்கியத்தை
# பருகுங்கள்




விளையாட்டுக் காரருக்கும் சரி, பலவீனருக்கும் சரி, போர்ன்-வீடா அதிக வன்மையும் அதிக புஷ்டியும் அளிக்கும் அதனால் அதிகசக்தியும்பெறுகின்றனர். குழந்தைகள் அதன் சாக்லேட் வாசனையை விரும்புகின்றனர். காலையிலும் மாலையிலும் ஒரு கிளாஸ் சூடான அல்லது குளிர்ந்த பாலில் இரண்டு தேக் கரண்டி அளவு கலந்து பருகவும்.




-ஆரோக்கிய விருக்ஷம்-




CFY-1 TAM

## காட்பரீஸ்
# போர்ன்-வீடா

கால்ஷியமும், ஏ & டி விடமின்களும் நிறைந்தது

காட்பரி-ப்ரை (இந்தியா) லிமிடெட்

டான் தெரியுமோல்லியோ?" என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினாள் கோமதியம்மாள்.

"தெரியாமலென்ன? அதைத்தான் கேட்டு விட்டுப் போகலாமென்று வந்தேன். ஆமாம்! உங்கள் பிள்ளை இவ்வளவு நாளா எங்கிருக்கானாம்?" என்று ஆவலுடன் கேட்டாள் பர்வதம்.

"இப்போ பம்பாயிலே வேலையிலிருக்கிறானாம். கேளடி! பரீக்ஷை 'பெயி'லாப் போயிடுத்துன்னு அப்பா முகத்தில் விழிக்க மனமில்லாமே ஓடிப்போயிட்டானாம். பார்த்தாயில்லியோ பிள்ளையின் சமத்தை?" என்று கூறினாள் கோமதியம்மாள்.

"கடவுள் புண்ணியத்திலே திரும்பி வந்தானே, அதைச் சொல்லுங்கோ!"

"ஆமாண்டியம்மா! அவனுக்கு ஒரு மாதந்தான் லீவிருக்காம். அதற்குள்ளே ஒரு பெண்ணைப் பார்த்துக் கல்யாணம் பண்ணி வைக்கணும். அங்கே அவன் சாப்பாட்டுக்கு ரொம்பத் திண்டாடுகிறானாம்" என்று எடுத்துரைத்தாள் கோமதியம்மாள்.

"என் மாமி! உங்கள் மருமானொருத்தி இருக்கா என்று சொன்னேளே, அந்தப் பெண்ணை இவனுக்குப் பார்க்கிறதுதானே?" என்று யோசனை கூறினாள் பர்வதம்.

"அது நல்ல யோசனை தாண்டி, அம்மா! இனிமே ஜாதகம் பார்த்து, பெண்ணையும் போய்ப் பார்த்துக் கல்யாணம் நிச்சயம் பண்ணறது என்கிறது முடியாத காரியந்தான். நீ நல்ல சமயத்தில் வந்து என் மருமானைப் பற்றிச் சொன்னாய். எனக்கு அந்த யோசனைகூடப் படவில்லையே" என்று தன்னையே நொந்து கொண்டாள் கோமதியம்மாள்.

"அப்படியே செய்யுங்கோ மாமி! நான் வரேன். வீட்டிலே ஏகப்பட்ட காரியத்தைப் போட்டு விட்டு வந்துட்டேன்" என்று கூறி விட்டு முகத்தில் மகிழ்ச்சிக் குறி பொங்க எழுந்திருந்தாள் பர்வதம்.

கோமதியம்மாள் தன் மூத்த பிள்ளைக்கு மருமானைக் கொடுக்கும் யோசனையைச் சித்தப்பாவுக்குத் தெரியப்படுத்தினாள் கடிதத்தின் மூலம். அவரிடமிருந்து சம்மதமென்று உடனே பதிலும் வந்து விட்டது. கல்யாண முகூர்த்தத்துக்கு நாளும் நிச்சயித்து விட்டார்கள். இச்செய்தி குப்புசாமியின் காதில் விழுந்ததும் அவனுக்குச் சந்தோஷம் கரை புரண்டோடியது.

அன்று ஆற்றங்கரையில் இருவர் மிகுந்த களிப்புடன் காணப்பட்டனர். அவர்கள் வேறு யாருமில்லை. குப்புசாமியும் ஜெயமுந்தான்!

தனக்கு இவள்தான் மனைவி என்றும், கணவன் என்றும் தீர்மானம் ஆனபிறகு, பேசுவதற்குக் கூசுவானேன்? கல்யாணம் என்ற சடங்கு ஆகும் வரை காதலர் உள்ளம் பொறுக்குமா? ஆகவே இருவரும் மனமொத்துப் பேசிக் கொண்டிருந்தனர்.

"ஆமாம்! உங்கம்மா உங்களுக்கு மாமா பெண்ணைத்தான் கல்யாணம் செய்து கொடுக்கணும் என்று நிச்சயித்திருந்தாளாமே! அதை ஏன் நீங்கள் என்னிடம் சொல்லவில்லை?" என்றாள் ஜெயம்.

"உன்னிடம் சொல்லியிருந்தால் நம் காதல் பங்கப் பட்டிருக்காதா? எங்கண்ணா சமய சஞ்சீவி. அவன் வராவிட்டால் நான் என் மாமா பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள நேரிட்டிருக்கும்" என்று கூறினான் குப்புசாமி.

"ஏன்? உங்கண்ணா மாத்திரம் என்ன? என் பர்வதம் மாமி மாத்திரம் நமக்காகத் தூது செல்லாவிட்டால் உங்கள் அம்மாவுக்கு அந்தப் பெண்ணை உங்கண்ணாவுக்குக் கொடுக்கத் தோன்றியிருக்குமா? நம் காதல் தெய்வீகக் காதல். தெய்வந்தான் நம்மைக் கூட்டி வைத்தது. தெய்வந்தான் உங்கள் அண்ணாவையும், பர்வத மாமியையும் அனுப்பி நம் காதலுக்கும், கல்யாணத்துக்கும் இடையூறாயிருந்த தடையையும் நீக்கியது" என்று கூறிக் 'களுக்'கென்று சிரித்தாள் ஜெயம்.

"போடி, அசடே!" என்று சொல்லி அவள் கன்னத்தில் தட்டப் போனான் குப்புசாமி. திடீரென்று ஒரு மின்னல் வெட்டி மறைந்தது.

"என்னடி ஜெயம்! உன்னை எங்கெல்லாம் தேடுகிறது? ஒரு குடம் ஜலம் எடுத்துக் கொண்டு வர இவ்வளவு நேரமா?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள் பர்வதம். இருவரும் திடுக்கிட்டுத் திரும்பினர். ஜெயத்தின் முகம் பயத்தால் பேயறைந்தது போல் மாறியது.

ஜெயத்தின் அருகில் குப்புசாமி இருப்பதைப் பார்த்ததும், "சரிதான்! கல்யாணமாவதற்குள்ளேயே இரண்டு பேரும் பேசிக்க ஆரம்பிச்சுட்டேளா?" என்று கேலியாகக் கேட்டாள் பர்வதம். தனது முயற்சி பலன் அளித்ததைக் குறித்து அவள் உள்ளம் பெருமித மடைந்தது.

அவர் தனது பேத்தியின் கல்யாணத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்ததும், கோமதியம்மாள் மகிழ்ச்சியுடன், "சித்தப்பா! கவலைப்படாதீர்கள். உங்கள் பேத்தியை என் பிள்ளைக்குக் கல்யாணம் செய்து வைக்கிறேன்" என்று கூறிவிட்டு வந்தாள்.

அந்த வாக்குறுதி ஞாபகத்துக்கு வந்ததும் கோமதியம்மாள், "பர்வதம்! நான் என் சித்தப்பா பேத்தியை இந்தப் பிள்ளைக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுப்பதாக அவருக்கு முன்பே வாக்களித்து விட்டேன். அவர் செய்திருக்கிற உதவிகளுக்கு..." என்று கூறினாள். அவளுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. அதற்குமேல் அவளால் பேச முடியவில்லை.

தனது காரியம் தோல்வி யடைந்ததை அறிந்த பர்வதம் இனியும் அங்கிருந்து வீண் வம்பளக்கப் பிரியமில்லாமல், "வரேன், மாமி! ஆத்துக்காரர் காத்துண்டிருப்பார்" என்று கூறிவிட்டுப் போய்விட்டாள்.

அவர்களிருவரும் பேசிக்கொண்ட வார்த்தைகள் ஒவ்வொன்றும் குப்புசாமியின் மனத்தைச் சித்திரவதைக் குள்ளாக்கின. அவன் மனக்கண் முன்பு ஆற்றங்கரையில் சந்தித்த அந்தப் பெண்மணி தோன்றினாள். மற்றொருபுறம் அவன் தாயார் சொல்லிய பெண்ணின் உருவம் வேறு தோன்றியது. இரு பெண்களும் ஒருவரையொருவர் போட்டி போட்டுக்கொண்டு அவன் கைத்தலம் பற்ற முன் வந்தனர். ஒரு பக்கம் காதல், மற்றொரு பக்கம் தாயின் ஆணை. எதை ஏற்பது, எதை நிராகரிப்பது என்ற சஞ்சலத்தில் ஆழ்ந்திருந்த அவனுக்கு அதற்குமேல் வீட்டினுள் செல்ல மனம் வரவில்லை. மன நிம்மதிக்காக நதி தீரத்தை நோக்கி நடந்தான்.



அன்று காலையில்தான் குப்புசாமி ஆற்றங் கரையில் பார்த்த அந்தப் பெண்ணின் பெயர் ஜெயம் என்று தெரிந்து கொண்டான்.

அவள் ரிடயர்டு சர்க்கிள் இன்ஸ்பெக்டர் வெங்கடராமய்யரின் ஒரே புதல்வி யென்றும், பர்வத மாமியின் மருமகளென்றும், நாலைந்து மாதங்களுக்கு முன்புதான் அவர்கள் கிராமத்திற்கு வந்தார்களென்றும் ஒருவர் மூலம் அவனுக்குத் தெரிய வந்தது. ஆனால் அவன் விதி அதற்குள் அவளை மறக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டதே?

★

ஞாயிற்றுக்கிழமை காலை எட்டு மணியிருக்கும். குப்புசாமி தன் அறையில் ஏதோ புத்தகம் ஒன்றை வைத்துப் படித்துக் கொண்டிருந்தான். ஒரு வண்டி தன் வீட்டு வாசலில் வந்து நிற்பதை ஜன்னல் வழியாகப் பார்த்தான். ஒரு நிமிஷத்தில் அவன் மனம் கவலைக் கடலில் ஆழ்ந்தது. தன் ஒன்று விட்ட மாமா வருகிறாரோ என்னவோ என்று எண்ணியதும் அவனுக்குத் தன் காதல் தீ அவிந்து சாம்பலாகி விட்டது போல் தோன்றியது.

எண்ணியபடி எதுவும் நடக்காதல்லவா? எதிர்பார்த்ததற்கு விரோதமாக அவனது அண்ணா ராமசாமி வந்து இறங்கினான். அவ்வளவுதான்! குப்புசாமி ஓடோடியும் வந்து "அண்ணா!" என்று சொல்லி அவனை அப்படியே கட்டிக் கொண்டான். அவர்கள் வீட்டில் மறுபடியும் கலகலப்பும், சந்தோஷ ஆரவாரமும் தாண்டவமாடியது.

மறுநாள் திங்கட்கிழமை. குப்புசாமி தனது அண்ணாவுடன் அளவளாவிக் கொண்டிருந்தான். ஆனால் அவன் கண் யாரையோ எதிர்பார்த்துக் கொண்டிருந்தது. வேறு யாரை இருக்கும்? பர்வத மாமியைத்தான்.

பர்வதம்மாள் ராமசாமி வந்து விட்ட சந்தோஷச் செய்தியைக் கேட்டு விட்டுப் போவதற்காக வந்திருந்தாள்.

"ஏன், பர்வதம்! இப்பத்தான் என் மனசு குளிர்ந்தது. என் மூத்தபிள்ளை வந்துவிட்

உண்டாகியிருக்குமா? அல்லது காலன்தான் அவரைக் கருணையின்றித் தனது பாசக் கயிற்றை வீசிப் பிடித்திருப்பானா?

தமது மூத்த பிள்ளை ராமசாமி எங்கேயோ ஓடிப் போய் விட்டான் என்ற செய்தியைக் கேட்டதும்தான் அவருக்கு அத்தகைய அதிர்ச்சி உண்டாயிற்று. அந்த அதிர்ச்சி அவரை இவ்வுலகத்திலிருந்து பிரித்தும் விட்டது.

ஒரு வருஷம் கண நேரத்தில் சென்று விட்டது போலிருந்தது. எஸ். எஸ். எல். ஸி. பரீட்சையில் பள்ளிக் கூடத்திலேயே முதலாவதாகத் தேறினான் குப்புசாமி.

பிறகு பட்டணத்தில் அவன் சித்தப்பா வீட்டிலிருந்து கொண்டு கலாசாலையில் மேல் படிப்பைத் தொடர்ந்தான். வருஷா வருஷம் கோடை விடுமுறையில் கிராமத்துக்கு வந்து போய்க் கொண்டிருந்தான். அப்பொழுதெல்லாம் அவன் தாயாருக்கு ஆனந்தம் கொள்ளாது. அதே மாதிரி இந்த வருஷமும் கோடை விடுமுறைக்கு வந்திருந்தான் குப்புசாமி.

*

ஒரு நாள் மாலை நாலு மணியிருக்கும். குப்புசாமி எங்கெல்லாமோ சுற்றித் திரிந்து விட்டு வீட்டுக்குள் நுழைந்தான். பர்வதம் தன் தாயாருடன் பேசிக் கொண்டிருப்பது தெளிவாக அவன் காதில் விழுந்தது. அந்தச் சமயத்தில் உள்ளே நுழைந்து அவர்கள் பேச்சைக் கெடுக்க விரும்பவில்லை. அதற்குக் காரணம் அவர்களிருவரும அவனைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்ததுதான்.

“மாமி! சித்திரை பிறந்து விட்டதே! பிள்ளைக்குக் கல்யாணம் கார்த்தி ஒன்றுமில்லையா?” என்று கேட்டாள் பர்வதம்.

“இந்த வருஷத்திலேயே அவனுக்குக் கல்யாணத்தைப் பண்ணிப்புடலாம்னுதான் இருக்கேன். எதுக்கும் காலம் வரவேண்டாமா?” என்றாள் கோமதியம்மாள்.

“மாமி! எனக்குக் கிளியாட்டமா ஒரு மருமானிருக்கா. அவளுக்கு உங்கள் பிள்ளையின் ஜாதகத்தை வாங்கிண்டு போகலாமென்றுதான் வந்தேன்” என்று கூறிக் கோமதியம்மாளுக்குத் தான் வந்த காரியத்தை அறிவித்தாள் பர்வதம்.

பர்வதம் தன் மருமானைப் பற்றிச் சொன்னதும் கோமதியம்மாளுக்குத் தன் சித்தப்பாவின் நினைவு வந்தது. அவருக்குக் கொடுத்த வாக்குறுதியும் ஞாபகத்துக்கு வந்தது.

கோமதியம்மாளுக்குத் தன் தகப்பனாரை விடச் சித்தப்பாவிடம் அசாத்தியப் பிரியம். அதற்குக் காரணம் இல்லாமலில்லை. கோமதிக்கு விவாக வயது வந்ததும் அவள் தகப்பனார் வரனுக்காகப் பல இடங்களுக்கு அலைந்தார். எல்லாம் வரதட்சிணைக் கொடுமையினால் தடைப்பட்டுப் போயின. என்ன செய்வார், பாவம்! கடைசியில் வழியின்றி ஒரு வயது முதிர்ந்தவருக்குக் கட்டிக் கொடுக்க நிச்சயித்து விட்டார். இச்சமயத்தில்தான் அவளது சித்தப்பா ஆபத் பாந்தவனாக வந்து தடுத்துப் பிறகு நல்ல இடமாகப் பார்த்துக் கல்யாணம் செய்து வைத்தார். இந்த உதவியினால் அவளுக்கு அவர்மீதுள்ள அன்பும், பற்றுதலும் மிகுந்ததில் ஆச்சரிய மில்லையல்லவா?

நாலைந்து மாதங்களுக்கு முன்பு ஒரு நாள் கோமதியம்மாள் தன் சித்தப்பாவைப் பார்த்துவிட்டு வருவதற்காகச் சென்றிருந்தாள். அவருடைய வீட்டுக்கு வந்ததும் அவளுக்குப் பேரிடி ஒன்று காத்துக் கொண்டிருந்தது. காலத்தின் கோளாறினால் ஜவுளி வியாபாரத்தில் அவளுடைய சித்தப்பாவுக்குப் பலத்த நஷ்டமேற்பட்டது. சொத்து பூராவையும் கடன்காரர்கள் பற்றிக் கொண்டனர். கோமதியம்மாளுக்கு அவரது ஏழ்மை நிலையைப் பார்த்ததும் துக்கம் தாங்க முடியவில்லை. அவருக்கு எப்படியாவது தன்னாலான உதவியைச் செய்ய வேண்டுமென்று தீர்மானித்தாள்.



# சமய சஞ்சீவி



பி.எஸ்.மணி

வற்றாத இரு கரையும் வெள்ளம் புரண்டோடும் பொருநை நதியில் கதிரவனின் கடாட்சத்தால் கண்ணுக் கெட்டியவரை ஒரே மணற்பரப்பாகக் காட்சியளித்தது. நதியில் தண்ணீர் ஒரு சிறு ஓடைபோல் ஓடிக்கொண்டிருந்தது. இதன் வட கரையில் தான் பாலாமடைக் கிராமமும் இருந்தது.

மாலை ஆறு மணி இருக்கும். பல சிறு குழந்தைகள் மணற் பரப்பில் உட்கார்ந்து விளையாடிக் கொண்டிருந்தனர். பெரியவர்கள் நாலைந்து பேராகச் சேர்ந்து உட்கார்ந்துகொண்டு வேதாந்த விஷயங்களையும், உலக விவகாரங்களையும் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தனர். இந்த விவாதத்தைக் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் மூன்று வாலிபர்கள்—குப்புசாமி, ரகு, பாலு ஆகிய மூவர் மணலில் உட்கார்ந்து பட்டண வாழ்க்கையையும் கிராம வாழ்க்கையையும் ஒப்பிட்டுப் பேசிக் கொண்டிருந்தனர்.

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருந்த போது திடீரென்று குப்புசாமியின் கவனம் ஆற்றங் கரையின் பக்கம் திரும்பியது. ஒரு பெண் வாகவமாகக் குடத்தை நீர் நிரப்பி இடுப்பில் வைத்துக்கொண்டு அன்ன நடை பயின்று வந்தாள். தன்னை ஒரு இளம் வாலிபன் நோக்குவதைக் கண்ட அப்பெண்ணும் அவனை நோக்கினாள். அக்காட்சி அவனைக் கனவுலகத்துக்கே இழுத்துச் சென்று விட்டது. அதன் பலனாகக் குப்புசாமி, நண்பர்கள் பேசிக் கொண்டிருந்த பேச்சைக் காதில் வாங்காமல், ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தான்.

இதைக் கண்ட பாலு, "என்னப்பா! எவ்வளவோ தரம் கூப்பிட்டும் பேசாமலிருக்கிறாயே?" என்று தட்டிக் கேட்டான். இவ்வளவு நேரம் சொப்பன லோகத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்த குப்புசாமிக்கு அப்பொழுதுதான் நினைவு வந்தது. "என்ன?" என்று கேட்டான்.

"டேய் பாலு! அவன் நன்றாகத் தூங்கி விட்டான். பரீட்சைக்கு இருபத்தி நான்கு மணி நேரமும் 'உரு'த்தட்டினால் தூக்கம் வராமல் என்ன செய்யும்?" என்று கேலி செய்தான் ரகு.

"ஆமாம்! சீக்கிரம் போய்த் தூங்கினால் தேவலை. ரயில் பிரயாணம் செய்துவிட்டு வந்தால் அலுப்புக்குக் கேட்பானேன்?" என்று சொல்லிக்கொண்டே எழுந்திருந்தான் குப்புசாமி.

மூவரும் மணற் பரப்பிலிருந்து எழுந்திருந்து வீடு நோக்கிப் புறப்பட்டனர். போகும் வழியெல்லாம் அன்று பார்த்த பெண்ணின் உருவம் குப்புசாமியின் மனக் கண்முன் தோன்றியது. அவன் மனம் கட்டாத கோட்டைகளெல்லாம் கட்டியது.

★

குப்புசாமியின் தகப்பனுக்குப் பாலாமடைக் கிராமத்தில் கர்ணம் வேலை. ஏதோ சாப்பாட்டுக்குக் கொஞ்சம் நிலமும் ஒரு வீடும் இருந்தது. இருந்ததை வைத்துக் கொண்டு சந்தோஷமாகக் காலம் கழித்து வந்தார். அவருக்கு இரண்டு பிள்ளைகள். மூத்தவன் ராமசாமி திருச்சியில் ஹாஸ்டலில் சேர்ந்து படித்துக் கொண்டிருந்தான். இரண்டாவது பையன்தான் குப்புசாமி. உள்ளூரிலேயே ஐந்தாம் பாரம் படித்துக் கொண்டிருந்தான்.

கடவுளுக்கு அவர் சந்தோஷமாக இருப்பது பிடிக்கவில்லையோ, என்னமோ? இல்லாவிட்டால் அந்தச் செய்தியைக் கேட்டதும் அவருக்கு அத்தகைய அதிர்ச்சி

வேல்நகு நெடுங்கண் செவ் வாய்
மெல்லியல் மிதிலை வந் த
சானகி நகுவள் என் றே
நாணத்தால் சாம்புகின் றான்.

[வான் நகு கைலை வெற்பை: வானத்தைப் பார்த்து உன் உயரம் இவ்வளவுதானா என்று பல்லைக் காட்டிச் சிரிப்பது போன்ற பனி மூடிய கைலயங்கிரியை; நகும் நெடுவரைத் தோளான்: இகழ்வதான அவ்வளவு பருத்த தோளை உடைய ராவணன்; நான் நகு பகைஞர் எல்லாம் நகுவர் என்று அதற்கு நாணான்: 'நான் என்னுடைய பகைவர்களை எல்லாம் எவ்வளவு கேவலமாக எண்ணிச் சிரிப்பேன்! அந்தப் பகைவர்கள் இப்போது என்னைப் பார்த்துச் சிரிப்பார்களே' என்ற எண்ணம் வரத்தான் செய்கிறது. ஆனாலும் அதற்கு லஜ்ஜைப்பட வில்லை; — பின் எதற்குத்தான் ராவணன் லஜ்ஜைப் படுகிறான்?

வேல் நகு நெடுங்கண்: வேலைப் பார்த்துச் சிரிக்கக் கூடிய நெடுங்கண் அதாவது வேலினும் கூர்மையான கண்; செவ்வாய்: சிவந்த இதழ்கள்—அத்தகைய கண்ணும் இதழும் கொண்ட—மெல்லியல் மிதிலை வந்த சானகி நகுவள் என்றே; மெல்லியலான மிதிலை மன்னனது மகளான ஜானகி இருக்கிறளே அவள் ஏளனம் செய்வாள் என்ற ஒரு காரணம் கொண்டு; நாணத்தால் சாம்புகின்றான்; அவமானம் மேலிட்டு மனம் இடிகிறான்—இலங்கையர் கோனாகிய ராவணன்.]

## பத்திரிகையில் ....



மனைவி:—இன்றைக்குப் பத்திரிகையிலே என்ன விசேஷம்!

கணவன் :—பவுன் விலை இறங்கவில்லை. புடவை இப்பொழுது வாங்கினால் நஷ்டமாம். வைரங்கள் விலை ஏறி விட்டதாம். பஸ் இலகுவில் கிடைக்கிற தில்லையாம். சினிமா தியேட்டர்களிலே ஏகக் கூட்டமாம். மற்றப்படி விசேஷம் ஒன்றுமில்லை.

ராவணனுக்கு வாழ்க்கையில் வெற்றிமேல் வெற்றிதான் இதுவரை கிடைத்து வந்தது. அவனுக்கு அடங்காத வீரரோ நாடோ எந்த உலகத்திலுமே கிடையாது என்ற புகழ் கொண்டவன்.

எக்களிப்போடும் அட்டகாசத்தோடும் வாழ்ந்து வந்தான். அத்தகைய மன்னாதி மன்னனுக்கு என்றும் இல்லாத நாணம் ஏற்படுகிறது.

அசோக வனத்தில் ராவணனைப் பார்த்துச் சீதை ஏளனமாய்ச் சொன்ன வார்த்தை அப்படியே ஞாபகத்துக்கு வருகிறது.

"உனக்குப் பத்துத் தலை இருக்கிறது; அதோடு இருபது தோளும் இருக்கிறது. ராமனுடைய வில்லை வைத்து வின்னியாசமாய் விளையாடுவதற்கு நல்ல இலக்குகள்தான், பேஷ் பேஷ்!" என்றான்.

பத்துள தலையும்தோ ளும்
பலபல பகழிதூ வி
வித்தக வில்லினாற் குத்
திருவிளை யாடற்கேற் ற
சித்திர இலக்கமா கும்,
அல்லது, செருவில்ஏற் கும்
சத்தியை போலும்! வீ ரர்க்(கு)
அடாதன செய்யத்தக் கோய்.

[பகழி: அம்பு; வில்லினாற்கு: வில்லை உடைய ராமனுக்கு; செருவில் ஏற்கும் சக்தியைப் போலும்: யுத்தத்தில் எதிர்த்து நிற்கும் சக்தி உள்ளவனா நீ.]

இந்த வார்த்தையெல்லாம் ஞாபகத்திற்கு வரும்போது மனம் எப்படி இடியும் ராவணனுக்கு என்பதை ஊகித்துக்கொள்ள வேண்டியதுதான்.



# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 286. ஜானகி ஏளனம் செய்வாளே!

முதல் நாள் போரில் ராவணன் தோல்வியுற்றான். தன்னந் தனியாக நடந்து நகரை நோக்கிப் போனான்.

மனைவியர் மக்கள் வழியில் நின்றார்கள். அவர்கள் யாரையும் ஏறிட்டுப் பார்க்கவில்லை. பூமியைப் பார்த்த வண்ணமாகவே சென்றான்.

அரண்மனைக்கு அருகில் மந்திரிகளான சகாக்கள் ஒரு பக்கம் நிற்கிறார்கள். மற்றொரு பக்கம் மனைவியரைச் சேர்ந்த சுற்றத்தார் நிற்கிறார்கள். அப்படி அப்படியே நிர்வாகப் பிரதானிகளும் தன் சொந்தக் கிளைகளான சுற்றத்தாரும் நிற்கிறார்கள். ஆங்காங்கு துண்டுபட்டுக் கூடிக் கூடி நிற்கிறார்கள். எல்லாரும் ஒரே நிலையில் ஸ்தம்பித்துப் போய்ச் செயலற்று நிற்கிறார்கள்.

மந்திரச் சுற்றத்தா ரும்
    வான்துதல் சுற்றத்தா ரும்
தந்திரச் சுற்றத்தா ரும்
    தன்கிளைச் சுற்றத்தா ரும்
எந்திரப் பொறியின்நிற் ப
    யாவரும் இன்றித்தான் ஓர்
சிந்துரக் களிறுகூ டம்
    புக்கெனக் கோயில்சேர்ந் தான்.

[எந்திரப் பொறியில் நிற்ப : விசைக்கருவி ஒன்று ஆட்டாதிருக்கும் போது எந்திர உருவங்கள் எப்படி அசைவற்று நிற்குமோ அப்படி அசைவற்று நிற்கிறார்கள் ; சிந்துரக் களிறு : பெரும் படலமான சிவந்த திலகம் அணிந்த கொம்பன்—ஆண் யானை ; கூடம் புக்கென : யானையானது கூடத்துக்குள்ப் பிரவேசித்த மாதிரி அரண்மனைக்குள்ப் பிரவேசித்தான் தன்னந்தனியனாய் ராவணன்.]

அரண்மனைக்குள்ப் போன ராவணன் படுக்கையில்ப் போய்ப் படுத்தான். படுக்கை அமைதியைக் கொடுத்துவிடவா செய்யும்! கொடுக்கவில்லைதான்.

என்றுமில்லாத அவமானம் அவனைப் பிடித்துத் தின்கிறது.

கைலையங்கிரியைச் செந்தூக்காய்த் தூக்கி விடுவான் என்று கவி பாடக் கூடிய தோள் கொண்டவன் ராவணன். அவனுக்கு அடடா, எப்படி வருகிறது அவமானம்!

வான்நகு கைலைவெற் பை
    நகும்நெடு வயிரத்தோ ளான்,
நான்நகு பகைஞர்எல் லாம்
    நகுவர்,என் றதற்குநா ணான்,

---

## முன் ஜாக்கிரதை!



செட்டியார்:—பாகவதர் ஸார்! என் பெண் கல்யாணத்துக்கு உங்கள் கச்சேரி வைக்கலாமென்று உத்தேசம். இப்பொழுதிலிருந்தே சுருதி கிருதி எல்லாம் சரி செய்து வைத்துக் கொள்ளுங்கள். சபையில் வந்து உட்கார்ந்துகொண்டு சுருதி கூட்டுகிறேன் என்று ஏகப்பட்ட பொழுதைப் போக்கி விடக்கூடாது!



அழுக்குபடிந்த பந்து தீங்குவிளைவிக்காதது
போலிருக்கிறது, ஆனால் உண்மையில்

# இந்த கைகள்
## மறைந்திருக்கும் அபாயத்தை
# தாங்குகின்றன!

—அழுக்கிலிருக்கும் கண்ணுக்குப் புலப்படாத கிருமி
களில் அபாயமிருக்கிறது.

**லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்**

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும்
கிருமிகளிலிருந்து
உங்களைக்காப்பாற்றுகிறது!




L. 138-50 TM

யின் தலையில் விழுந்தன. இதில் ஆபீஸ் அவசரம் வேறு! பாவம், மன்னிக்கு அன்று வேலை கொட்டி வாங்கிவிட்டது!

இந்த நிலையில் மணி சுமார் எட்டு இருக்கும். வேலம்மாள் மெள்ள பயந்து கொண்டே அங்கே வந்து தோன்றினாள்.

அவளைப் பார்த்தவுடன் மன்னிக்கு அடங்கியிருந்த கோபம் எல்லாம் பொங்கி, "ஏண்டி, இத்தனை நாழி?" என்ற கேள்வியுடன் வெளிப்பட்டது.



வேலம்மாள்

வேலம்மாள் கழுத்தை வளைத்து, உடலைச் சுருக்கி, கைகளைப் பிசைந்து "இல்லேம்மா...நேற்று நானும் எங்க வீட்டுக்காரரும் 'வாய்க்கை' (ஆமாம், 'வாழ்க்கையின் சென்னை உச்சரிப்பு) பார்க்கப் போயிருந்தோம். ராவிக்கு இரண்டாம் ஆட்டம் பார்க்கப் போயிருந்தோம். திரும்ப நேரம் ஆயிப்போச்சு. வந்து படுத்தேன், அம்மா! நல்லா தூங்கிட்டேன். பொழுது விடிஞ்சதே தெரியவில்லை, அம்மா! ஆனால் 'பயாஸ்கோப்' ரொம்ப நல்லா இருந்ததும்மா!" என்று விமரிசனத்துடன் விளக்கம் கூறினாள்.

"போறும்மா! நீ பயாஸ்கோப்பு பார்த்த லக்ஷணம். இங்கே என் தாவு தீர்ந்து போகிறது!......" என்று ஆரம்பித்தாள் என் மன்னி.

இதைக் கேட்ட என் அத்தை "ஏண்டி அவளைக் கோபிக்கக்கிறே. பாவம்! அவளுக்கும்தான் சினிமா கினிமா பார்க்கணும் என்று இராதோ! என்னமோ, ஒரு நாள் அவ பண்ணுகிற வேலையெல்லாம் நாம் பண்ணிக்கொண்டால் குடியா முழுகிப் போய்விடும்? நம்ம கையும் அவ கையைப் போலத்தானே? இல்லை, நம்ம கை என்ன தங்கத்திலா பண்ணியிருக்கு, வேலை செய்தால் தேய்ந்து போகும் என்று எண்ணுவதற்கு! என்னமோ ஒருநாள், அவ வரவில்லைன்னு அப்படிக் கோபிச்கக்கிறயே" என்று வேலம்மாளுக்குப் பரிந்து என் மன்னியை வைததுண்டே, அதைச் சொல்லி முடியாது. அன்று என் அத்தை செய்த பிரசங்கத்தைக் கேட்டிருந்தீர்களானால், எந்தக் கம்யூனிஸ்ட் தலைவருக்கும், தொழிலாளர் தலைவருக்கும் என் அத்தை குறைவில்லை என்று சர்டிபிகேட் கொடுத்திருப்பீர்கள்.

ஆனால் என் அத்தையின் பிரசங்கத்தைக் கேட்ட என் மன்னிக்கு மனசு எப்படியிருக்கும்? இன்று வேலம்மாளும் அவள் கணவனும் ஜோடியாகச் சினிமா பார்க்கப் போனதை அனுதாபத்தோடு பார்க்கும் அத்தைக்கு, அன்று என் மன்னியும் அண்ணாவும் போனதை அப்படிப் பார்க்க முடியவில்லையல்லவா?

அனுதாபம் என்பது எவ்வளவோ நல்ல குணம். கோபத்துக்கு எதிர்மாறான குணம் என்று கூடச் சொல்வார்கள். ஆனால் என் அத்தையின் அனுதாபம் கோபத்தை யல்லவா மூட்டுகிறது!

தாய்மை எய்தியவுடன் தன் குழந்தையிடத்து அளவு கடந்த பாசம் உண்டாகிறது பெண்களுக்கு. ஆடவனுக்குக் கல்யாணமானவுடன் ஒருவிதப் பொறுப்புணர்ச்சி ஏற்படுகிறது. ஒரு மாதரி 'அத்தை' என்ற பதவி எய்தியவுடன் இத்தகைய 'தவறான அனுதாப உணர்ச்சி' ஏற்பட்டு விடும் போலிருக்கிறது! அதன் பலனாக அத்தை போன்ற கெட்டவள் கிடையாது என்றுகூட எண்ணத் தோன்றுகிறதல்லவா?

* * *

"அதெல்லாம் இல்லை! எங்கள் அத்தை ரொம்ப நல்லவள். எங்கள் வீட்டுச் சுற்று வட்டாரத்தில் யாரை வேண்டுமானாலும் கேளுங்கள்!" என்று நீங்கள் சொல்வது என் காதில் விழுகிறது.

நான் மட்டும் என் அத்தை கெட்டவள் என்றா சொல்லுகிறேன்? என் அத்தையும் எவ்வளவோ நல்லவள்தான். என் அத்தையைப் பற்றி அறிந்து கொள்ள எங்கள் சுற்று வட்டாரத்தில் சுற்றி அலைய வேண்டாம். அதோ, வாலைக் குழைத்துக் கொண்டு ஓடும் கறுப்பனைக் கேளுங்கள், போதும்! அவன் என் அத்தையைப் போல நல்லவள் எங்குமே கிடையாது என்று சொல்லுவான்.



இவன்தான் கறுப்பன்

இதற்குக் காரணம் எனக்குத் தவறான உணர்ச்சியாக இருந்தது. கறுப்பனுக்குச் சரியான உணர்ச்சி யல்லவா! அவனிடம் அனுதாபம் கொண்டாள் அல்லவா? ஆகவே, உலகத்தில் எதையும் பரிபூரணமான கெடுதல் என்று சொல்ல முடியாது. தவறிலும் ஒரு நேர்மை யிருக்கிறது!

# கறுப்பனைக் கேளுங்கள்!

எஸ்.வி.எஸ்.

அன்றைக்குச் சைக்கிளிலிருந்து விழுந்து விட்டேன். விழுந்ததில், முழங்கையிலும் காலிலும் நல்ல காயம் பட்டு விட்டது. நான் சைக்கிள் விடத் தெரியாத குற்றத்தினால் விழவில்லை. எங்கள் வீட்டு வேலைக்காரியின் கறுப்பன் என்ற நாய் நான் வேகமாக சைக்கிளில் வந்து கொண்டிருந்த போது, சைக்கிள் சக்கரத்தில் அகப்பட்டுக் கொண்டதால்தான் விழ நேர்ந்தது.

இந்தச் சம்பவத்தைப் படிக்கும்போது உங்களுக்கு 'ஐயோ! விழுந்து விட்டானே, பாவம்!' என்ற அனுதாபம் ஏற்படுகிறதல்லவா? முன்னும் பின்னும் தெரியாத என்னிடத்தில் உங்களுக்கு இவ்வளவு அனுதாபம்! ஆனால் என்னைக் குழந்தை முதல் சீராட்டிப் பாராட்டி வளர்த்த ஒரு ஆத்மாவுக்கு மட்டும் என் மேல் சற்றும் அனுதாபம் ஏற்படவில்லை. அதற்கு மாறாக, "ஏண்டி வேலம்மா! உன் நாய் அவன் சைக்கிளில் மாட்டிக் கொண்டதாமே! அதற்கு ஒன்றும் பலத்த காயமில்லையே! அதன் கிரக சாரம் ரொம்பப் படுத்தறது! அதற்கு இப்போ போதாத வேளை போலிருக்கு!" என்று ரொம்பவும் அனுதாபம் தெரிவித்தாள்.

கறுப்பனுக்குக் கிடைத்த பரிவில் கால் பங்கு கூட எனக்கில்லை!

ஆமாம்; இப்படி அபூர்வமாக மனிதனுக்கில்லாத அனுதாபம் நாய்க்குக் காட்டிய ஆத்மா யார் என்றுதானே கேட்கிறீர்கள்?

அந்த ஆத்மா வேறு யாருமில்லை—என் அத்தை அம்மாள்தான்!

எங்கள் வீட்டுக்கு அன்றைக்கொரு நாள் அடுத்தவீட்டு அம்புஜு மாமி ஒரு கரண்டி கடுகு கடன் வாங்கிக்கொண்டு போக வந்திருந்தாள். அந்த மாமியிடம், "என்னமோ, அம்மா! காலம் கலி காலமாய்ப் போச்சு என்று எல்லாரும் சொல்லுவது சரியாகத்தான் இருக்கு!" என்று சொன்னாள் என் அத்தை.

"அப்படி என்ன மாமி வந்துடுத்து?" என்றாள் அடுத்தவீட்டு அம்புஜு மாமி.



"இதேதடா, காலம்! ஆம்படையானைத் தூக்கி இடுப்பிலே வைச்சுண்டேன்னு சுத்தறேன் என்கிறதுகள், நம்ம ஆத்துக்கு வந்திருக்கும் மாட்டுப் பெண்கள்! இந்தப் பிள்ளைகளும் பெண்டாட்டி கீறின கோட்டைத் தாண்டறதில்லைன்னு சங்கல்பம் வேறு பண்ணிக் கொண்டு விட்டதுகள்! அக்கிரமமான்னா இருக்கு!" என்று விளக்கினாள் அத்தை.

"ஏது மாமி! உங்காத்து மாட்டுப் பெண்கள் எல்லோரும் ரொம்ப அடக்க ஒடுக்கமாய்......"

"போறுமே, இவா அடக்க ஒடுக்கம்! சினிமாவுக்குப் போகணும்னாலும், செம்புப் பாத்திரம் வாங்கப் போகணும்னாலும் ஆம்படையான் பெண்டாட்டியாகத்தான் போகிறது! சோப்புக் கட்டின்னாலும் சரி, தோசைக் கல்லுன்னாலும் சரி ஜோடியாகத்தான் போகிறது! இப்படி எதற்கெடுத்தாலும் ஜோடியாகத்தான் போகிறதுன்னு வைச்சுண்டா காலம் எப்படி உருப்படுமாம்? நீயே சொல்லுடி அம்புஜு!" என்றாள் அத்தை.

"ஆமாம் மாமி! காலம் தலைகீழாகத்தான் போயிண்டிருக்கு. நாம் ஒன்றும் சொல்லப்படல்லை!" என்று அத்தையின் பிரேரணையை ஆமோதித்து விட்டு ஒரு கரண்டிக் கடுகுடன் வீட்டுக்குத் திரும்பினாள் அம்புஜு.

அத்தையின் இந்தப் பிரசங்க மாரிக்குக் காரணம் அன்றைக்கு என் அண்ணாவும் மன்னியும் 'வாழ்க்கை' சினிமா பார்க்கப் போனதுதான். அவர்கள் இருவருமாகப் போனது தனக்குப் பிடிக்கவில்லை என்பதைத்தான் அப்படிப் பிரமாதமாக வெளியிட்டாள் என் அத்தை.

இன்னொரு நாள் நடந்த மற்றொரு சம்பவத்தையும் சொல்ல வேண்டும்.

காலையில் சரியாக ஆறு மணிக்கு வேலைக்கு வரும் வேலம்மாள், அன்று மணி ஏழரையாகியும் வரவில்லை. அவள் வராததனால் அவள் செய்ய வேண்டிய வேலைகள், தான் செய்ய வேண்டிய வேலைகள் எல்லாம் மன்னி

தரும்படி கேட்டுக் கொண்டோம். அதிகாரியும் அதற்கு ஒப்புக் கொண்டார்.

ஆனால் எங்களுக்கு வந்த உத்தரவில் என்னை ஒரு பள்ளிக்கும் என் தமக்கை விமலாவை வேறு ஒரு பள்ளிக்கும் போய் வேலையில் அமருமாறு எழுதி யிருந்தது. நான் இருக்கும் இடத்திலிருந்து உத்தியோகம் பார்க்கும் ஊருக்குப் பத்து மைல் ரயிலிலும், பதினைந்து மைலுக் கதிகமாக மோட்டார் வண்டியிலும், மூன்று மைல் கால் நடையாகவும் போக வேண்டும். அவளுக்கும் ஏறக்குறைய அப்படியேதான் இருந்தது.

கஷ்டப்பட்டு அங்கே சென்றால் குடியிருப்பு வசதியோ மற்ற வசதியோ இல்லை. தனியாய்ச் சென்றதனாலோ என்னவோ யுவதியாகிய என்னைப் பழித்துப் பேசுகிறது கிராமம். இந்த நிலையில் என் கடமையைச் செய்ய முடியுமா? இளம் 'இரு சகோதரி ஆசிரியைகளை' ஒரே இடத்தில் வேலைக்குப் போட்டால் சர்க்காருக்கு உண்டாகும் கஷ்டம்தான் என்னவோ, தெரியவில்லை!

நாகர்கோவில்
6—3—50

எம். இ. சரோஜா

○●○

## நாடும் நாடகமும்

நாடகத் துறை சம்பந்தப்பட்ட மட்டில், நமது மொழி சரியான வளர்ச்சி யடைய வில்லை என்பதை வருத்தத்துடன் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். முதலாவதாக, அரசாங்கத்தார் இதில் போதிய கவனம் செலுத்தி ஆவன செய்யவில்லை. ஏதோ, ஆர்வத்தினால் வேலைசெய்து வந்த தனிப்பட்ட கலைஞர்களின் மூலமாய்த்தான் அனுதைபோல் அது வளர்ந்து வந்ததே தவிர, நாட்டிலுள்ளோரின் அக்கறையினாலும் அன்பினாலும் அல்ல.

இதற்கு ஆதாரமாக ஒரு சம்பவம், சமீபத்தில் நடந்தது யாவரும் அறிந்ததே.

சரியான ஆதரவின்மையாலும், மற்றுமுள்ள இடைஞ்சல்கள் பலவாலும், கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாய் இடைவிடாமல் தொண்டுசெய்து தமிழ் நாட்டின் மதிப்பையே உயர்த்தி வந்த திரு. டி. கே. எஸ். சகோதரர்கள் தங்களது நாடக சபையை நிறுத்தி வைக்கும்படி நேரிட்டது மிகவும் வருந்தவேண்டிய சங்கதி. உண்மையாகவே ஜனங்களின் ஆதரவும், சர்க்காரின் பராமரிப்பும் அவர்களுக்குச் சரியானபடி இருந்திருக்குமானால் இப்படி நிறுத்திவைக்க நேரிட்டிருக்காது.

ஒரு நாட்டின் முன்னேற்றத்திற்கு நாடகம் எவ்வளவு தூரம் பயன்படும், பங்கு பெறும் என்பதை அறிஞர்கள் எல்லோரும் அறிவார்கள். இன்றைய ரஷ்யாவின் முன்னேற்றத்திற்குக் காரணமே நாடகம்தான் என்று கூறப்படுகிறது.

சாதாரணமாக, 'ஆயிரம் பிரசங்கமும் சரி, ஒரு புத்தகமும் சரி' என்று சொல்லுவார்கள். ஆனால் நாம் சொல்லுகிறோம், 'ஆயிரம் புத்தகமும் சரி, ஒரு நாடகமும் சரி' என்று. அதுவும் டி. கே. எஸ். சகோதரர்கள் நடத்திவந்த 'ஔவையார்' என்னும் நாடகம், உண்மையிலேயே மிக மிக உயர்ந்தது. கல்விப் பணிக்குச் சரியான கருவி! 'கல்வி' என்ற பெயரால் அரசாங்கம் கோடி கோடியாய்ப் பணத்தைச் செலவழித்தும் காண முடியாத பலனை, இந்நாடகம் சில வாரங்கள் நடந்ததின் மூலம் பலனை அளித்தது. அதுவும், இந்நிலையில் அவர்கள் சபையை மூடவேண்டி வந்ததென்றால், அந்தக் கலைக்கு நாட்டில் எவ்வளவு மதிப்பு இருக்கிறதென்று தெரிகிறதல்லவா!

'கலை என்பது மொழி, இன வேறுபாட்டைக் கடந்ததுதான்...' என்று கூறும் கல்வி மந்திரியின் கூற்றை நாம் ஒப்புக் கொள்ளுகிறோம். ஆனால், அதற்காகப் பாரபட்சம் காட்டவேண்டிய அவசியமில்லையே...! தெலுங்கு நாடகக் கலையை ஆராயக் கமிட்டி நிறுவிவிட்டு, தமிழ் நாடகக் கலைக்கு மட்டும் ஒன்றும் செய்யாமலிருப்பதின் அர்த்தம் என்ன? ஆகையால் இது விஷயத்தில் இதுவரை இருந்ததுபோல் மௌன உருவமாய் இராமல், அரசாங்கம் 'தமிழ்நாடகக் கலை வளர்ச்சி'க்கு உடனே வேலை செய்யுமென்று எதிர்பார்க்கிறேன்.

தியாகராஜநகர்
5—3—50

ச. கு. மணியம்

○●○

## ராமகிருஷ்ண உபநிஷதம்

திங்கள் 'கல்கி' இதழில் ஸ்ரீ ராஜாஜி அவர்கள் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் உபதேச மொழியைத் தொடர்ச்சியாக எழுதி வரப்போவதாக அறிந்து மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தேன்.

நம் பாரத நாட்டின் பண்புக்கு ஆணிவேர் ஸ்ரீ ராமகிருஷ்ணர். இன்றைய உலகம் இன்னும் ஒரு சிறு ஆண்டில் அன்னாரின் அவதார மகிமையை சுவாமி விவேகானந்தர் சொன்னபடி உணர ஆரம்பிக்கும்.

இன்று தமிழ் நாட்டில் ஸ்ரீமத் ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் உயிர், உணர்ச்சி ததும்பும் உபதேசத்தை ஸ்ரீ ராஜாஜி அவர்கள் வாயிலாக நாம் படித்து உணர்வதினால் தமிழர்களுக்கு உண்மை பக்தி சிரத்தை ஏற்படுவதுடன் மகாத்மா காந்தியையும் உள்ளவாறு அறிய ஏது ஏற்படும்.

திருமங்கலம்
4—3—50

ராம. சீரங்கம்

---

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ "கர்நாடக சங்கீத போக்கும்" என்ற கடிதம் எழுதிய ஸ்ரீ ஸ்ரீநிவாசாச்சாரியாருக்கும், "வரதட்சிணைப் பேய் ஒழியாதா?" என்ற கடிதம் எழுதிய ஸ்ரீமதி கே. அலங்காரத்துக்கும் ரூ. 12-8-0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

"வருபவர்களுக்கு மிகவும் உபயோகமாக இருக்குமே" என்று சொல்லிக் கொண்டார்கள்.

ஆகையால், ஒலிப்பதிவு செய்வதற்கு வேண்டிய வசதிகள் நிறைந்திருக்கும் இக்காலத்தில், கர்நாடக ஸங்கீத அபிமானிகளும், அரசாங்கத்தாரும், கர்நாடக ஸங்கீதப் பொக்கிஷங்கள் அழியாமல் இருக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

மேற் குறிப்பிட்டவர்களில் சிலருடைய பாட்டு ஒலிப்பதிவு செய்யப்பட்டுள்ளது. ஆயினும், எவரெவர்களுக்கு, எவ்வெவற்றில் திறமை இருக்கிறதோ, அவற்றை அறிந்து ஒலிப்பதிவு செய்ய வேண்டும். பல்லவி பாடுவதில் சிறந்த வித்வான்கள் உள்ளனர். ராகம் தானம் இவற்றில் புகழ் பெற்றவரும் இருக்கின்றனர். உருப்படிகள் பாடுவதில் தனிச் சிறப்பு உடைய சிலர் உள்ளனர். இவர்களைத் தேர்ந்தெடுத்து, பல்லவி, ராகம், தானம், உருப்படிகள் இவற்றை நன்றாகப் பாடச் செய்து ஒலிப்பதிவு செய்யலாம்.

நம் புராதனக் கலையில் ஹரிகதா காலக்ஷேபமும் ஒன்று. இதுவும் வர வர க்ஷீணதசை அடைந்து வருவது நம் எல்லோருக்கும் தெரிந்ததே. சில ஹரிகதா காலக்ஷேபங்களையும் ஒலிப்பதிவு செய்து வைக்க வேண்டும். மேற்கூறியபடி, கர்நாடக சங்கீதத்தின் சிறந்த அம்சங்களையும், ஹரிகதா காலக்ஷேபங்களையும் ஒலிப்பதிவு செய்து வைத்தால், அவை கர்நாடக சங்கீதத்திற்கும், ஹரிகதா காலக்ஷேபங்களுக்கும் சிறந்த பொக்கிஷங்களாக விளங்குவதுடன், இனி வரும் இளம் வித்வான்களுக்கும், இன்று ஸங்கீதம் பயிலும் மாணவர்களுக்கும் மிகவும் பயன்படும்.

தியாகராயநகர் தேரழுந்தூர் -
5—3—50 ஸ்ரீநிவாஸாச்சாரி

○●○

## ★ வரதட்சிணைப் பேய் ஒழியாதா?

இக்கடிதம் ரொம்பவும் கஷ்டப்பட்டு யோசித்து அதன் பின் தான் 'கல்கி'யின் வட்டமேஜைப் பகுதிக்கு அனுப்பியிருக்கிறேன். நான் ஒரு ஏழைக் குடும்பத்தில் பிறந்தவள். எனக்கு நான்கு வயதில் ஒரு சகோதரி இருக்கிறாள். என் விதவைத் தாய், நான், என் நான்கு வயது சகோதரி ஆகிய மூவர்தான் எங்கள் குடும்பம். என் தந்தை காலமாகி நான்கு வருடங்கள் ஆகின்றன. நான் 'ஸ்மார்த்தப் பெண்'. நான் ஆறாவதுப்பு வரை படித்து நிறுத்தி விட்டேன். தற்போது என் தாய் அக்கம்பக்கத்தில் உள்ள வீடுகளிலும், ஹோட்டல்களிலும் மா அரைத்தும், அப்பளம் இட்டும் பெறும் பணத்தைக் கொண்டு நாங்கள் ஜீவனம் நடத்தி வருகிறோம். நானும் இங்குள்ள பெரிய மனிதர்கள் வீட்டில் சமையல் செய்து வருகிறேன். எனக்கு வயது பதினேழு ஆகிறது.

என் தாய்க்கு என்னைக் கலியாணம் செய்து வைத்து விட்டால் பொறுப்படங்கும் என்ற எண்ணம். இன்னும் நான் இரண்டு வகுப்புப் படித்திருந்தால் எங்காவது பள்ளிக்கூடங்களில் வேலைக்கு அமர்ந்து குடும்பத்தைக் காப்பாற்றலாம். அதற்கு வழியில்லாமல் போய் விட்டதே என்ற வருத்தம். 'வரதட்சிணைப் பேய்' ஓங்கியிருக்கும் இக்காலத்தில் என் போன்ற அபலைகளை யார் கலியாணம் செய்து கொள்வார்கள்? இது கதையல்ல. என் புண்பட்ட மனதின் துக்கத்தை ஒருவாறு ஆற்றிக் கொள்ள இக் கடிதத்தை வெட்கத்தையும் விட்டு எழுதுகிறேன். வரதட்சிணைப் பேய் ஒழிந்தால்தான் என் போன்ற பெண்களுக்குக் கஷ்டம் குறையும். 'ஸ்மார்த்த' குடும்பங்களிலும், வடகலை ஐயங்கார் குடும்பங்களிலும்தான் இது இருந்து வருகிறது. இதற்கு முடிவே கிடையாதா? இது ஒழியவே ஒழியாதா?

காரைக்குடி கோ. அலங்காரம்
6—3—50

○●○

## அற்ப வசதி?

நானும் எனது தங்கை விமலாவும் இரட்டைக் குழந்தைகள். இருவரும் ஒரே வருடத்தில் பரீட்சையில் தேறினோம். இருவருடைய உயிர் நாடியும் ஒன்றேதான். நாங்கள் இருவரும் ஆரம்ப ஆசிரியர்கள் ஆனோம். சர்க்கார் பாடசாலையில் வேலை செய்ய ஆசை கொண்டு நாங்கள் மனுச் செய்தோம். மனு விசாரணையில் இருவருக்கும் ஒரே பள்ளியிலோ அல்லது ஒரே ஊரிலோ வேலை

## எழுதி யிருந்தது!



அக்கிராசனர் (எழுதிய பிரசங்கத்தைப் படிக்கிறார்):—"மகா ஜனங்களே! நீங்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து இந்தக் கூட்டத்துக்குத் திரண்டு வந்திருப்பது பற்றி மிக்க பெருமை கொள்ளுகிறேன்...!"

"உம், சொன்னாள். நீ நேற்று மாம்பலத்தி லிருந்து பஸ்ஸில் வந்தது; வரும் வழியில் எவனோ 'தடியாட்டமா' ஒருவன் அடிக்கடி கவனித்தது; அவன் நீ இறங்கின இடத்திலே இறங்கிப் பின்னால் வந்தது; அவனைப் பார்த்துப் பயந்துபோய் வழியில் 'பர்ஸை'ப் பறி கொடுத்தது...... எல்லாம் லக்ஷ்மி மாமி கதையாகச் சொன்னாள் என்னிடத்தில். அது மட்டுமல்ல, இன்னொரு விஷயம்கூடச் சொல்ல வேண்டும். நான்தான் லக்ஷ்மி மாமி கேட்ட பதினைந்து ரூபாயைக் கொடுக்கப் போகிறேன்... அதுவும் நேற்று ராத்திரி வழியிலே கிடைக்கக் கொண்டு!" என்று முடித்தான் ரங்கன்.

"என்ன? என்ன......?" என்று ஆர்வமாக வினவினாள் வாசவி.

"ஒன்றுமில்லை; நேற்று ராத்திரி ஒரு 'பிளாஸ்டிக் பர்ஸ்' என் காலில் இடறியது. அதில் பதினைந்து ரூபாயும் சில்லறையும் இருந்தது" என்று கூறிச் சட்டைப் பையிலிருந்து அதை எடுத்தான்.

"ஆ, இது என்னுடையதல்லவா!" என்று வியப்போடு கூறினாள் வாசவி. அவள் நயனங்கள் ஆச்சரியத்தால் மலர்ந்தன.

"இன்னிக்கு உன்னுடையதா யிருக்கலாம். ஆனால் கொஞ்ச நாள் போனால் 'நம்முடையது' என்றுதான் சொல்ல வேண்டி யிருக்கும்......" என்று தமாஷாகக் கூறினான் ரங்கன்.

"வாசவியும் விடவில்லை. அதுதானே இன்னிக்கு மாமி சொன்னாள் 'உனக்கு வரப்போகிறவர் கிட்டே யிருந்தே கடன் வாங்கித் தருகிறேன்' என்று. இப்பொழு நல்லவா புரிகிறது விஷயம்" என்றாள்.

ரங்கனுக்கு இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விட மனமில்லை. "தடியாட்டமா ஒருவனா......", என்று இழுத்தான் ரங்கன்.

"அடடா, அது உங்களைக் குறிப்பிட்டுச் சொல்லவில்லையே. எனக்குப் பின்னாலே நான் பஸ்ஸை விட்டு இறங்கியதும் ஒருவன் இறங்கிப் பின் தொடர்ந்தான். அவனைக் கண்டு பயந்தல்லவா பர்ஸைத் தொலைத்தேன்" என்று கூறிவிட்டு வீட்டுக்குச் சென்றாள் வாசவி.

அவள் சென்றதும், ரங்கன் தன்னையே ஒரு முறை கண்ணாடியில் பார்த்துக் கொண்டான். தான் ஒன்றும் முரடன் அல்ல என்று அவன் வாய் முணுமுணுத்தது.




## புகை விஷயம்

மனித சுபாவமே விசித்திரமானது போலும். எது கூடாது என்று சொல்லப்படுகிறதோ, எது சட்ட பூர்வமாகத் தடுக்கப்படுகிறதோ அதை மீறுவதுதான் மனித சுபாவமாக இருக்கிறது.

சென்ற வாரம் நான் திருச்சியிலிருந்து தஞ்சை சென்று கொண்டிருந்தேன். மீட்டர் கேஜ் வண்டி; அதிலும் கூட்டம் நிறைந்த சிறிய கம்பார்ட்மெண்ட்; உட்காருவதற்குக் கூட இடமில்லாமல் நின்று கொண்டிருந்தனர் பலர். அந்தக் கூட்டத்துக்குள் ஒரு பெண்மணி தனது பச்சிளம் குழந்தையுடன் உட்கார்ந்திருந்தாள். இந்த இடத்தில் தான் மனித மேதையின் வெற்றிக் களிப்பைக் காட்டச் சந்தர்ப்பம் கிடைத்தது போலும்! நான்குபேர் சேர்ந்தாற்போல் (இருவர் - பெரிய மனிதர்கள் தோரணையில் இருந்தவர்கள் — சிகரெட்டை எடுத்துக் கொண்டனர். மற்ற இருவர் பீடியை எடுத்துக் கொண்டனர்) புகை பிடிக்க ஆரம்பித்து விட்டனர். சமிறுக்குள் மற்றும் பல என்ஜின்கள் புகைவிடத் தொடங்கின. அப்புகை கம்பார்ட்மெண்டின் முகட்டை முட்டித் தப்பிச் செல்ல வழியில்லாமல் அருமையான வாசனையுடன் எங்கள் நாசித் துவாரங்களில் சரண் புகுந்தது. அந்தச் சுருள் சுருளான வாசனைப் புகையின் இன்பத்தை என்னைப் போன்றவர்களும், ஏன், அந்தக் குழந்தையுங்கூட அனுபவிக்கட்டுமே என்ற கருணை படைத்தவர்கள் அவர்கள்! புகை வெளியில் செல்வதற்கும் நாங்கள் அனுமதிக்கவில்லை. ஏனெனில் ஜன்னல் ஓரத்தில் நின்று கொண்டு விட்டோம்.

இந் நிலையில் எஸ். ஐ. ஆர். காரர்கள் மட்டும் மூன்று பாஷைகளில் கொட்டை எழுத்துக்களில், "பிரயாணிகள் இதர பிரயாணிகளின் சம்மதமின்றிப் புகை பிடிக்காமல் இருக்கும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்" என்று அறிக்கை வேறு போட்டிருக்கிறார்கள். மேற்சொன்ன நான்கு நபர்களிடம் அந்தப் போர்டைக் காண்பித்துப் புகை பிடிக்க வேண்டாம் என்று தடுத்தால் 'அது போர்டளவில் தானே' என்று சொல்கிறார்கள். அதையும் மீறின சில புண்யவான்கள், அந்தக் காகித போர்டையே தங்கள் திருக்கரங்களினால் கிழித்தெறிந்து விடுகிறார்கள்.

சட்டப்படி புகை பிடிப்பது குற்றமாகும் என்று கருதப்படும் தியேட்டர்களில், வெள்ளித் திரையில் அந்த எச்சரிக்கையைக் காட்டும் நேரத்திலேயே புகை பிடிக்கும் தைரியசாலிகள் சாதாரண மக்களாகிய நாம் கேட்டுக் கொள்ளும் விண்ணப்பத்துக்கா செவிசாய்க்கப் போகிறார்கள்?

கரூர்
4—3—50

பா. சுப்பரத்னம்

○●○

## ★ கர்நாடக சங்கீத பொக்கிஷம்

ஸங்கீத கலாநிதி டைகர் அவர்களின் கானம் ஒலிப்பதிவு செய்யப்படவில்லையென்று ஒருவரும், ஒலிப்பதிவு செய்யப்பட்டிருப்பதாக ஒருவரும் 'கல்கி' வட்டமேஜைப் பகுதியில் எழுதியிருந்ததைப் படித்தேன்.

அண்ணாமலை சர்வகலாசாலைச் சங்கீதப் பிரிவின் தலைவராக இருந்தவர்களும், கர்நாடக ஸங்கீதத்தில் சிறந்த புகழ்பெற்று விளங்கியவர்களும், எனது குருநாதர்களுமான காலஞ்சென்ற ஸங்கீத கலாநிதி ஸ்ரீமான் சபேச ஐயர் அவர்கள், ஸ்ரீ பொன்னையா பிள்ளையவர்கள் ஆகியோரின் சிறந்த ஸங்கீத வித்வத் ஒலிப்பதிவு செய்யப்படவில்லை என்பது கர்நாடக சங்கீத உலகிற்குப்பெரியகுறையாகும்.

போன மாதம் தேவகோட்டையில் ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகள் உத்சவம் நடைபெற்ற பொழுது, சங்கீத கலாநிதி மழவராயனேந்தல் சுப்பராம பாகவதரவர்கள் ஆராதனை தினத்தன்று முதலில் "தரிதாபு லேனி" என்ற ஸாவேரி ராகக் கீர்த்தனத்தையும், ஸங்கீத கலாநிதி அரியக்குடி ராமானுஜ ஐயங்காரவர்கள் "எந்தரோ மஹானுபாவுலு" "ஸாதிஞ்சினே" என்ற பஞ்சரத்னக் கீர்த்தனங்களையும், ஸங்கீத கலாநிதி மகாராஜபுரம் விச்வநாத ஐயர் அவர்கள், "ஜகதானந்தகாரக" "துடுகுகல" என்ற கீர்த்தனங்களையும், பாலக்காடு மணி ஐயர் அவர்கள் மிருதங்கத்துடன் பாடினார்கள். மேற்கூறிய வித்வான்கள் பாடும்பொழுது, அங்கு கூடியிருந்த எல்லோரும், "இம்மாதிரி கர்நாடக ஸங்கீதத்தை இவர்களுக்குப் பின்பு எப்படிக் கேட்கப் போகிறோம்? மணி ஐயர் அவர்கள் மிருதங்கம் வாசித்தது கீர்த்தனங்களையே வாசித்ததுபோல இருந்தது. இப்படிப்பட்ட சிறந்த ஸங்கீதத்தை ஒலிப்பதிவு செய்துவைத்தால், பின்னால்

"எப்படித் தொலைத்தாளாம்?" என்றான்.

"நேற்று பஸ்ஸிலே வரும்போது எவனோ ஒரு மூடன் அவளையே அடிக்கடி கவனித்த வந்தானாம். அவன் நடுவிலே எங்காவது இறங்கித் தொலைஞ்சு விடுவான் என்று அவள் நினைத்தாளாம். ஆனால் அந்தத் 'தடியன்' அவள் இறங்கின இடத்திலேயே இறங்கிக் கொஞ்ச தூரம் பின்னாலும் சென்றானாம். அவள் பயந்து வேகமாக நடந்த பரபரப்பில் பர்ஸைத் தவற விட்டு விட்டாளாம்" என்று ஒரு அத்தியாயம் சொல்லி முடித்தாள் லக்ஷ்மி அம்மாள்.

ரங்கனுக்குச் சிரிப்பு, கோபம், ஆத்திரம் எல்லாம் ஏக காலத்தில் அமோகமாக வெளி வந்தன. எல்லாவற்றையும் அடக்கிக் கொண்டு, "என் கிட்டே பதினைஞ்சு ரூபா இருக்கு, அது வேணுமானால் தருகிறேன்" என்று கூறினான் அவன்.

"எனக்கு இப்போ வேண்டாம். அந்தப் பெண் மூன்று மணிக்கு 'வரேன்'னு சொல்லிப் போயிருக்கா. அப்போ கொடுத்தால் போதும்" என்று கூறிச் சென்றாள் அவள்.

★

ரங்கனுக்கு வேலையிலே கவனம் செல்லவில்லை. வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டுவிட்டு மறுபடியும் வக்கீல் வீட்டுக்குத் திரும்பும் வரையில் அந்தப் பெண்ணை நினைத்து அவன் மனம் கருவிக் கொண்டிருந்தது.

'மாம்பலத்திலிருந்தே அடிக்கடி கவனித்தானாம்! நடுவே எங்காவது இறங்கித் தொலைஞ்சு விடுவான் என்று எதிர்பார்த்தாளாம்!...அப்படியானால் என் என்னையும் அடிக்கடி அவள் பார்க்க வேண்டும்...ஒரு வேளை அவள் பின்னால் வயது வந்த ஒருவன் போனானே, அவனைக் கண்டு பயந்துதான் சொன்னாளோ?...ஆனால் அவன் மாம்பலத்திலிருந்தா வந்தான்?...இருக்கட்டும், இன்று சாயங்காலம் பார்க்கலாம்...' என்று மனதினுள்ளேயே ஏதோ திட்டம் போட்டுக் கொண்டான் ரங்கன்.

மத்தியானம் பன்னிரண்டு மணிக்கு வழக்கம் போல் லக்ஷ்மி அம்மாள் பக்கத்து வீட்டுக்குப் போய் விட்டாள்.

மூன்று மணிக்கு வருவதாகச் சொன்ன பெண் ஒரு மணிக்கே வந்து நின்று விடுவாள் என்று ரங்கன் எதிர்பார்க்கவேயில்லை.

ரங்கனைக் கண்டதும் அவள் முகம் 'குபீர்' என்று சிவந்தது. மனம் திடுக்கிட்டது போன்ற உணர்ச்சியும் அவள் முகத்தில் பிரதி பலித்தது! வெட்கத்தால் அவளுடைய கால்கள் பின் வாங்கின.



அதைக் கூர்ந்து கவனித்த ரங்கன் ஆத்திரமாக, "என் என்னைப் பார்த்துப் பின் வாங்குகிறாய்? நான் என்ன 'தடியாட்டமா' யிருக்கிற ஒருவனா?" என்று வினவினான்.

அவள் பதில் பேசவில்லை.

மீண்டும் ரங்கன், "எல்லாப் பெண்களுக்கும் ஆண்கள் என்றால் மூடர்கள் என்று தோன்றி விடுகிறது போலிருக்கு. இந்த மாதிரி நினைத்துக் கொண்டு யார் பின்னால் வந்தாலும் பயந்து கொண்டு கையில் இருக்கிற பர்ஸைக்கூடத் தொலைத்து விட்டு..." என்று சீறத் தினான் ரங்கன்.

அவள் முகம் கோபத்தால் கன்றிப் போயிற்று.

"உங்களுக்கு யார் சொன்னார்கள்?" என்றாள்.

"நீ இன்றைக்கு யாரிடம் காலையிலே பணம் கேட்க வந்தாயோ அந்த அம்மா சொன்னாள்!"

"இன்னும் ஏதாவது சொன்னாளா?" என்று கேட்டான்.

# காலக்ஷேபம்

## இல்லைதான்!

மூத்துவை அவனுடைய தாயார் ஒரு சிநேகிதியின் வீட்டுக்கு அழைத்துச் சென்றிருந்தாள். மூத்து அந்த வீட்டுச் சோபாவின் மேல் குதித்து விளையாடினான்.

அம்மா:—மூத்து, சோபாவின் மேல் ஏறாதே! ஏறினால் சோபா வீணாகப் போய் விடும். அப்புறம் இந்த வீட்டு அம்மாமி கோபித்துக் கொள்ளுவாள்.

மூத்து:—இந்த வீட்டு அம்மாமிதான் இங்கே இல்லையே! நான் குதிப்பதை அந்த அம்மாமி எப்படிப் பார்க்க முடியும்?

அம்மா:—அவள் பார்க்காவிட்டால் கடவுளாவது பார்த்துக் கொண்டிருப்பார்!

மூத்து:—கடவுள் பார்த்தால் பார்த்துக் கொள்ளட்டுமே? இதுதான் அவருடைய சோபா இல்லையே!

★

## ஒன்றுமில்லை!

அப்பா:—சோமு, வண்ணானிடம் துணி போட்டாயே! என் சட்டைப் பையில் ஏதாவது இருந்ததா என்று நன்றாய்ப் பார்த்துவிட்டுத் தானே போட்டாய்?

சோமு:—ஆமாம், அப்பா, சட்டைப் பையில் ஒரு ஓட்டைதான் இருந்தது!

★

## பேஷ்!

உத்தியோகத்துக்கு மனுச் செய்து கொள்ள வந்தவர்கள் வரிசையாகச் சுமார் ஐம்பது பேர் நின்று கொண்டிருந்தனர். ஒவ்வொருவராக மானேஜரைப் பார்த்துக் கொண்டு வந்தனர். கொஞ்சம் புத்திசாலி என்று தோன்றிய ஒருவனைப் பார்த்து மானேஜர், "அதோ பார்த்தாயல்லவா அந்த வரிசையை? அத்தனை பேரிலும் உன்னை ஏன் பொறுக்கி எடுக்கவேண்டும் என்பதற்குத் தக்க காரணம் சொல்லுவாயா?" என்று கேட்டார்.

"சொல்லுகிறேன், ஸார்! நான் ஒருவன் தான் வரும்போதே மத்தியான டிபனையும் கொண்டு வந்தேன்!" என்றான் அவன்.

அவனுக்கே அந்த வேலை கிடைத்தது.

## பிசகு!

எஜமான்:—உமக்கு இந்த மாதத்திலிருந்து சம்பளம் பத்து ரூபாய் உயர்த்தியிருக்கிறேன். நீர் இதுவரையில் ஒரு பிசகு கூடச் செய்ததில்லை அல்லவா......?

குமாஸ்தா:—இல்லை, ஸார்! ஒரே ஒரு பிசகு செய்திருக்கிறேன்.

எஜமான்:—அது என்ன?

குமாஸ்தா:—இருபது ரூபாய் சம்பள உயர்வை எதிர்பார்த்தேன்!

★

## ரொம்ப சரி!

"என்னை மட்டும் நீ இன்னொரு தடவை 'முட்டாள்' என்று சொல்லு, உன் கன்னத்தில் பளீர் என்று அறைகிறேன், பார்!"

"அப்படித்தான் நான் இன்னொரு தடவை சொன்னேன் என்று வைத்துக் கொள். என்னை என்ன செய்து விடுவாய்?"

"சரி, நானும் நான் உன் கன்னத்தில் அறைந்ததாக வைத்துக்கொள்வேன்!"

★

## ஓஹோ!

கணவன்:—பார்த்தாயா, நான் அப்போதே அந்த டாக்டரின் சம்பந்தம் வேண்டாம் என்று சொல்லவில்லையா?

மனைவி:—ஆமாம். சொன்னீர்கள்! அதற்கு இப்பொழுது என்ன வந்துவிட்டது?



கணவன்:—அன்றைக்கு நம்ம லக்ஷ்மியின் ஜாதகத்தை வாங்கிக்கொண்டு போவதற்கு டாக்டர் வீட்டுக்கு வந்தார் அல்லவா? அதற்கு 'விஸிட்டிங் பீஸ்' கேட்டு இப்பொழுது 'பில்' அனுப்பி யிருக்கிறார்!

# பதினைந்து ரூபாய்

பி. வி. ஆர்.

இரவு எட்டு மணிக்கு திருவல்லிக்கேணி பஸ் ஸ்டாண்டில் இறங்கிய ரங்கன் பஸ்ஸில் பார்த்த 'அந்தப்' பெண்ணை நினைத்துக் கொண்டே நடந்தான். அவளும் அங்கே தான் இறங்கினாள். அவளுக்குப் பின்னால் வயதுவந்த ஒருவன் செல்லவே, அவளைப் பின் தொடர்வது உசிதமில்லை என்று தோன்றிற்று அவனுக்கு.

நல்ல களை பொருந்திய முகம். கூர்மையான கண்கள். டாம்பீகமில்லாத டிரஸ்! மாம்பலத்திலிருந்து திருவல்லிக்கேணி வரும் வரையில் அவன் உத்தரவு இல்லாமலே அவன் கண்கள் அவளைப் பார்த்தன. விருப்பு வெறுப்பு ஒன்றும் பிரதி பலிக்காத அந்தக் கண்களை அவன் நன்றாகப் புரிந்து கொள்ள முடியவில்லைதான்.

'சீ, ஒரு பஸ்ஸில் பார்த்த பெண்ணைப் பற்றிக் கனவு காண்பதைவிட முட்டாள்தனம் வேறு ஏதாவது இருக்கிறதா? ஏதோ பார்த்தோம். அவளும் ஜாடை மாடையாகப் பார்த்தாள். இதில் என்ன அலாதி விசேஷம் இருந்துவிடப் போகிறது! சம வயதுடையவர்கள் உள்ளத்திலே தோன்றும் இந்தமாதிரி ஆசைகளெல்லாம் வெகு சீக்கிரத்தில் மறையக் கூடியவைதானே?'

இப்படியெல்லாம் எண்ணி என்னதான் அந்தப் பெண்ணை மறக்க முயன்றாலும், அவள் உருவம் ஏனோ அவன் மனக் கண் முன் தோன்றிக் கொண்டேயிருந்தது.

சிருங்காராச்சாரி தெருப்பக்கம்தான் வந்திருப்பாள். காலிலே ஏதோ ஒரு பொருள் 'திடீர்' என்று இடறுவதாகத் தோன்றிற்று. ரங்கன் குனிந்து அதை எடுத்தான்—பளபள வென்று பிரகாசிக்கும் ஒரு பிளாஸ்டிக் மணிபர்ஸ்! அதைத் திறந்தான் அவசர அவசரமாக. மூன்று புத்தம் புதிய ஐந்து ரூபாய் நோட்டுகளும் கொஞ்சம் சில்லறையும் அதனுள் காட்சியளித்தன!

அட, இது 'அந்தப்' பெண் கையில் இருந்தது போலிருக்கிறதே! இதிலிருந்து தான் அவள் பஸ் கண்டக்டரிடம் சில்லறை எடுத்துக் கொடுத்தாள்.

ரங்கனுடைய நடையின் விரைவு அதிகமாயிற்று. அவளும் சிருங்காராச்சாரித் தெருவுக்குத்தான் போயிருக்க வேண்டும். அவள் பின்னால் போனவன் கூட, அவள் தவறவிட்டதைக் கவனிக்கவில்லை போலிருக்கிறது!

சிருங்காராச்சாரி தெரு முழுதும் தேடினான்; அந்தப் பெண் காணப்படவில்லை. அந்த வீதியினின்றும் கிளம்பிய சந்துகளில் எல்லாம் பவனி வந்து பார்த்தான். அந்த மங்கை மீண்டும் தோன்றவில்லை.

திடீர் என்று ஒரு யோசனை உதித்தது அவனுக்கு. ஒருவேளை 'பர்ஸை'த் தேடிக் கொண்டு அவளே பஸ் ஸ்டாண்டை நோக்கி, வந்த வழியிலேயே திரும்பி யிருப்பாளோ?

இந்தச் சந்தேகம் உதித்தவுடன் ரங்கன் மீண்டும் பஸ் ஸ்டாண்டை நோக்கி நடந்தான்.

அங்கும் ஏமாற்ற மடைந்தான். ஆகவே, சலித்துப்போய் வீடுவந்து சேர்ந்தான் அவன்.

★

மறுநாள் ஞாயிற்றுக் கிழமை. வழக்கம் போல் எட்டு மணிக்கு வக்கீல் சாரநாதன் வீட்டுக்குப் போனான் ரங்கன். 'டைப்' அடிப்பதற்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்து கொண்டிருக்கையில் சாரநாதனுடைய ஒன்று விட்ட தமக்கை லக்ஷ்மி அம்மாள் அறைக்குள் வந்தாள்.

“ரங்கா, நேற்று ராத்திரி ஏதோ அவசர காரியமாகச் சாரநாதன் பெங்களூருக்குப் புறப்பட்டுப் போனான். எப்போ வருகிறான் என்று தெரியவில்லை. முக்கிய காரியங்களை உன்னைக் கவனித்துக் கொள்ளச் சொன்னான்” என்று கூறி முடித்து விட்டு வெளியேறியவள் மீண்டும் நுழைந்து, “உன்னிடம் ஒரு பதினைஞ்சு ரூபாய் இருக்குமா? கடனாக வேண்டும். சாரநாதன் வந்ததும் தருகிறேன்” என்று கூறினாள்.

“ரொம்ப அவசரமோ?” என்று வினவினான் ரங்கன்.

“ஆமாம். இன்னிக்குக் காலையிலே வாசகி—அதுதான் உனக்குக் கூடப்பார்த்து, ஜாதகம் மிக நன்றாகச் சேர்ந்திருக்கிறது என்று சொல்லியிருக்கிறேனே, அவள் வந்தாள். நேற்று ராத்திரி அவள் மாமா வீட்டுக்கு, திருவல்லிக்கேணிக்கு வந்தாளாம். வருகிற வழியிலே பர்ஸைத் தவற விட்டு விட்டாளாம்” என்று நிறுத்தினாள் லக்ஷ்மி அம்மாள்.

ரங்கனுக்கு விஷயம் புரிந்து விட்டது. சுற்றிச் சுற்றிக் கடைசியில் பர்ஸ் லக்ஷ்மி அம்மாளுக்கு வேண்டியவளுடையதா? தனக்குப் பார்த்திருக்கிற பெண்ணுடையதுதானா!

பெண்ணை அரசாங்கம் கடைசியில் நியமித்திருக்கிறதென்றும் இது விளம்பர நிபந்தனைகளுக்கு முரண்பட்டதென்றும் ஸ்ரீ சுந்தரலிங்கம் புகார் செய்தார். ஆனால் இதன் மீது விவாதம் நடப்பதைச் சபாநாயகர் அனுமதிக்கவில்லை. இப்படிப்பட்ட விஷயங்களை ஒரு தீர்மானமாகக் கொண்டு வந்தால்தான் விவாதிக்கலாமென்று சபாநாயகர் தீர்ப்பளித்த பொழுது, ஒரு தீர்மானத்துக்கு முன் அறிக்கை கொடுப்பதாகச் சொல்லிவிட்டு ஸ்ரீ சுந்தரலிங்கம் உட்கார்ந்தார்.

தமிழ் புரோகிராம் அதிகாரியின் பதவியை வகிக்கும் செல்வி எலியாஸ் ஒரு மலையாளப் பெண்மணி என்றாலும் அவரும் அவருடைய குடும்பத்தினரும் நீண்ட காலமாக யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த வட்டுக் கோட்டையில் குடியேறியிருப்பவர்கள். சமீபத்தில் பார்லிமெண்டு சபை செய்யும் பிரஜா உரிமைச் சட்டத்தின்படி இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொண்டிருப்பவர்கள். செல்வி எலியாஸுக்கு மலையாளம் தெரியுமென்றாலும் அவர் பேசும் தமிழ் மலையாளத் தமிழ் என்று சென்ற ஒரு வருஷத்துக்கிடையில் யாரும் புகார் செய்ததாகத் தெரியவில்லை. இதில் ஒரு விசேஷம் என்னவென்றால் அவரைத் தேர்ந்தெடுத்து நியமித்த கமிட்டி அங்கத்தினர்களெல்லோரும் தமிழ் மேதைகளென்று கருதப்படும் யாழ்ப்பாணத் தமிழ்ப் பிரமுகர்கள் தான். அந்தக் கமிட்டியில் ஒரு இந்தியர் கூட இல்லை.

இப்பதவிக்கு அனேகம் மனுக்கள் வந்தன. அவ்வளவையும் ஆராய்ந்து மனுதாரர்களையும் நேரில் அழைத்துப் பேசிச் சகல யோக்யதாம்சங்களும் உடையவர் செல்வி எலியாஸ் ஒருவர்தானென்று தீர்மானித்து அவரை நியமித்தார்கள். எந்தப் பதவிக்கும் போதிய யோக்யதாம்சமில்லாதவர்களை நியமிப்பதில்லையென்றும், தகுந்த யோக்யதையுடைய இலங்கையர்கள் கிடைக்காவிட்டால் இலங்கையரல்லாதாரை நியமிப்பதென்றும் எப்பொழுதுமே ஒரு சம்பிரதாயமிருந்து வருகிறது. இதன்படி அனேகம் ஐரோப்பியர்கள் இலங்கை அரசாங்கத்தில் பதவி வகிக்கிறார்கள். அப்படியிருக்கையில் ஒரு இந்தியர், அதிலும் இலங்கையராகும் சகல யோக்யதாம்சங்களுமுடைய ஒருவர் நியமிக்கப்பட்டதை ஸ்ரீ சுந்தரலிங்கம் இப்பொழுது ஆட்சேபிப்பதன் நோக்கம் இலங்கை — இந்தியர் வேற்றுமைக்குத் தூபம் போடுவதுதான் என்றே கருத வேண்டியிருக்கிறது.

# அரசியல் திட்டத்தில் அநீதி

ரஜனி

கொழும்பு, மார்ச் 2.

இலங்கை இந்தியர்களைக் கடுமையாகப் பாதிக்கக்கூடிய ஒரு மசோதாவைப் பற்றி இன்று பார்லிமெண்டில் விவாதம் நடந்தது. இந்தியர்களுக்கு ஓட்டுரிமை யில்லாமலும், பார்லிமெண்டு அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப்படும் உரிமையில்லாமலும் செய்வதற்காகத் தேர்தல் சட்டத்திருத்த மசோதா என்ற ஒரு சட்டத்தைப் பார்லிமெண்டு ஏற்கெனவே நிறைவேற்றியுள்ளது. அதைத் தொடர்ந்து, பார்லிமெண்டு அங்கத்தினராகும் உரிமையில்லாத இலங்கையரல்லாதார்களில் ஐரோப்பியர்களுக்கு மட்டும் இந்த உரிமையை அளிக்கும் நோக்கத்துடன் பிரதம மந்திரி அரசியல் திட்டத் திருத்த மசோதாவை இன்று மறுபடியும் விவாதத்துக்குக் கொண்டு வந்தார்.

குடியரசு இந்தியாவின் அரசியல் திட்டத்தின்படி இந்தியா பார்லிமெண்டுக்கு இந்தியப் பிரஜைகள் மட்டுமே தேர்ந்தெடுக்கப்படலாம். இந்தியரல்லாதவர்கள் இந்தியா பார்லிமெண்டில் இருக்க முடியாது. ஆனால் வேறு சில காமன்வெல்த் நாடுகள் அந்த தேசப் பிரஜைகளைத் தவிர இதர காமன் வெல்த் நாட்டுப் பிரஜைகளுக்கும் அதன் பார்லிமெண்டில் அங்கத்தினராகும் உரிமை அளித்துள்ளன. இப்போது பிரதம மந்திரி கொண்டு வந்துள்ள மசோதாவின் நோக்கம் இதுதான்: இலங்கையருக்கு இவ்வித உரிமையளிக்கும் காமன்வெல்த் நாட்டவருக்கு இலங்கையிலும் அதேமாதிரி உரிமையளிக்க வேண்டும். இந்தியருக்கு மட்டும்தான் இந்தியா பார்லிமெண்டில் ஸ்தானம் என்று இந்திய அரசியல் திட்டம் கூறுவதினால், இலங்கையிலுள்ள இந்தியர்களுக்கு அந்த உரிமை அளிக்கக் கூடாது என்பதுதான் மசோதாவின் இலட்சியம்.

மசோதாவை எதிர்க் கட்சி அங்கத்தினர்கள் எல்லோரும் கடுமையாக ஆட்சேபித்தார்கள். இலங்கையின் சுபிட்சத்துக்கு அரும் பாடுபட்ட இந்தியர்களுக்குச் சில உரிமைகளை மறுத்து அதே உரிமைகளை ஐரோப்பியர்களுக்கு மட்டும் அளிப்பது அநீதி யென்று வாதாடினார்கள்.

முடிவில் மசோதா சாதகமாக ஐம்பத்தொன்று ஓட்டுகளும் பாதகமாக இருபத்தொன்பது ஓட்டுகளும் பெற்று இரண்டாம் முறையாக நிறைவேறியது.

## அவருடைய ஆசை!




## தூபம் போடுகிறார்!

கொழும்பு ரேடியோ நிலயத்தில் தமிழ் புரோகிராம் அதிகாரியாக ஒரு இந்தியப் பெண்மணி நியமிக்கப் பட்டதைப் பற்றிப் பார்லிமெண்டில் மறுபடியும் வீண் ஆட்சேபணையைக் கிளப்பியுள்ளார், ஸ்ரீ வி. சுந்தரலிங்கம். இப்பதவிக்கு விளம்பரம் செய்யப்பட்ட பொழுது ஒரு இலங்கையரையே நியமிப்ப தென்று கூறப்பட்டிருந்ததாம். மலையாளத் தமிழ் பேசும் ஒரு

டது. எல்லோரும் பரபரப்புடன் எழுந்து கண்களைத் துடைத்துக் கொண்டனர்.

"எங்கேயடா, அப்பா?" என்றான் பாட்டி. "தெருக் கோடியில் வந்து கொண்டு இருக்கிறார்" என்றான் பேரன். இதற்குள் அவர் வந்துவிட்டார். 'ஏதோ வெளியிலே போனேனாம்; வீட்டிற்குப்போய் நிம்மதியாய்ச் சாப்பிட்டுவிட்டுத் தூங்கலாம்; பிறகு சினிமாவுக்கோ, கடற்கரைக்கோ போகலாம்,......' என்று திட்டமிட்டுக் கொண்டு வந்த வாசுதேவன் வீட்டில் முழு அமைதி நிலவியதைக் கண்டு ஒன்றும் புரியாமல் அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டார்.

"ஏன்? என்ன சமாசாரம்? எதற்காக இப்படி எல்லோரும் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு இருக்கிறீர்கள்?" என்று கலவரத்துடன் கேட்டார்.

"குழந்தை காணாமல் போய்விட்டாண்டாப்பா! எவ்வளவு நேரமாக நாங்களும் உன்னைத் தேடிக்கொண்டிருந்தோம்! ஞாயிற்றுக்கிழமை கூடவா வீட்டிலே தங்கக்கூடாது?" என்று பாட்டி முதலில் விஷயத்தை வெளிப்படுத்தினாள்.

"குழந்தையா காணாமற் போய்விட்டான்?" என்று அப்படியே உட்கார்ந்து விட்டார் வாசுதேவன். பிறகு, கொஞ்சம் கொஞ்சமாக அவர் மூளை வேலை செய்யத் தொடங்கியது. குழந்தை காணாமற் போன செய்தியைப் போலீசுக்குத் தெரிவிக்க நினைத்தார். உடனே தம் அறையைத் திறந்து உள்ளே போய் டெலிபோன் ரிஸீவரைக் கையில் எடுத்தார். அப்பொழுதுதான் அவர் கண்கள் அந்த அதிசயத்தைக் கண்டன.

கட்டிலின் மீது குழந்தை நிம்மதியாகத் தூங்கிக் கொண்டு இருந்தான்! வீட்டில் நடக்கும் அமர்க்களம் ஒன்றையும் அவன் பொருட்படுத்தவில்லை.

வாசுதேவன் எல்லோரையும் கூப்பிட்டு இந்த சந்தோஷச் செய்தியைச் சொல்ல நினைத்துப் பலமாகக் கூப்பிட்டார். ஆனால் அவர் குரல் எழும்பவே இல்லை. தொண்டை அப்படியே அடைத்துக் கொண்டது. அங்கேயே நின்றுவிட்டார்.

"ஏண்டாப்பா, டெலிபோனில் போலீசுக்குச் சமாசாரம் தெரிவித்தாயா?" என்று பாட்டி குரல் கொடுக்கும் வரையில் வாசுதேவன் அப்படியே நின்று கொண்டிருந்தார்; உடனே நினைவு வந்தவராய்த் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையைத் தூக்கிக்கொண்டு, பைத்தியக்காரனைப்போல் வெளியே ஓடி வந்தார். வாசுதேவனைப் பார்த்து வீட்டில் இருந்தவர்கள் பிரமித்துப் போய்விட்டார்கள்.

"எங்கே இருந்தது குழந்தை?" என்று ஆவலோடு கேட்டாள் சாவித்திரி.

"எங்கேடாப்பா இருந்தான், குழந்தை?" என்று ஆச்சரியத்தோடு கேட்டாள் பாட்டி. ராமுவும், அவன் தம்பியும் குழந்தையை மாறி மாறிப் பார்த்தனர். அவர்களுக்கு ஒரே ஆச்சரியமாயிருந்தது.

வாசுதேவன் சொன்னார்: "காலையில் நான் ஆபீஸ் வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தேன். அப்போது ராமு குழந்தையை என் அறையில் விட்டு விட்டுப் போய்விட்டான். வேலை செய்யும் போது குழந்தை தொந்தரவு பண்ணப் போகிறானே என்று இரண்டு பிஸ்கோத்துக் கொடுத்துக் கட்டிலின்மேல் உட்கார வைத்தேன். பிறகு ஒன்பதரை மணிக்குச் சிநேகிதரைப் பார்க்கப் போக வேண்டும் என்ற நினைப்பு வந்ததும், உடனே சட்டையை மாட்டிக்கொண்டு கிளம்பிவிட்டேன். அறையைப் பூட்டிக் கொண்டு வெளியே போன எனக்கு குழந்தையின் ஞாபகமே இல்லை. கடைசியில் இப்பொழுது அறையைத் திறந்த பிறகு அல்லவா தெரிகிறது?"

"அடாடா, உங்களுடைய ஞாபக சக்தியே சக்தி! இப்படிக் கொண்டாருங்கள் குழந்தையை!" என்று கன்னத்தைத் தோளில் இடித்துக்கொண்டு குழந்தையை வாங்கிக்கொண்டாள் சாவித்திரி.

"இப்படியும் ஒரு பிள்ளை இருக்குமா? குழந்தையை அறையிலே விட்டுப் பூட்டி விட்டு வெளியிலே யாராவது போவார்களா? வாடா, என் கண்ணு! எப்படியடா இத்தனை நேரம் கூச்சல் போடாமல் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டு இருந்தாய்?" என்றாள் பாட்டி.

"இன்றைக்கு ராத்திரி நாம் தூங்கினாற்போலத்தான்! இப்பவே இரண்டு மணி நேரம் தூங்கிவிட்டானே! என் கண்ணு! அப்பா விடம் பேசாதே! உன்னை அறையில் போட்டுப் பூட்டிவிட்டுப் போய் விட்டார்!" என்று சாவித்திரி குழந்தையை வாங்கி மாறிமாறி இரு கன்னங்களிலும் முத்தமிட்டாள். அவள் கையிலிருந்து வாங்கிப் பாட்டி முத்தமிட்டாள்.

குழந்தை நடந்தது என்னவென்று தெரியாமல் எல்லோரையும் பார்த்துக் கடகட வென்று சிரித்தான்.

"அம்மா! பசி உயிர் போகிறது! குழந்தைதான் அகப்பட்டு விட்டானே? போய்ச் சீக்கிரமாகச் சமையல் பண்ணேன்!" என்றான் ராமு.

"சாவித்திரி! எனக்கும் ரொம்பப் பசியாகத்தான் இருக்கிறது! சீக்கிரம் சமையல் ஆகட்டும்" என்றார் வாசுதேவன்.

இவ்வாறு தெருவில் வந்தவர்களும் போனவர்களும் தங்கள் கற்பனையை உபயோகப் படுத்திப் பலவிதமாக, சாவித்திரியையும் பாட்டியையும் விசாரித்தனர். ஆனால் அத்தனை பேரில் ஒருவராவது உண்மையில் 'தேடுகிறேன்' என்று வாய் வார்த்தைகூடச் சொல்லவில்லை.

"ஏண்டி, அம்மா! குழந்தைக்கு நகை என்னென்ன போட்டிருக்கே? அவன் வந்தா கோவிச்சுக்கப் போறான்! 'நான்தான் நகை போடாதே, போடாதேன்னு சொல்லியிருந்தேனே' என்பான்! சவரன் விற்கிற விலையிலே குழந்தைக்கு நகை என்னத்துக்கு? ஐயோ! எவனாவது குழந்தையைத் தூக்கிண்டு போயிருந்தா என்ன கதியாயிருக்குமோ? நினைச்சாலே எனக்கு 'பகீர்' என்கிறதே? குழந்தையைக்கூடக் கவனிக்கப் பொழுது இல்லாமல் அப்படி உனக்கு என்ன காரியம் இருந்தது?" என்று சொல்லிப் பாட்டி மாட்டுப் பெண்ணை ஒரு போடுபோட்டு எல்லோரையும் கலங்க வைத்தாள்.

"ஏண்டா ராமு! உன்னைத்தானேயடா, நான் குழந்தையைக் கவனித்துக் கொள்ளச் சொன்னேன்? நீ எங்கேயடா குழந்தையை விட்டு விட்டுப் போனாய்? அது இருக்கட்டும். நீ குழந்தையைக் கடைசியாக எப்போது பார்த்தாய்?" என்று கேட்டாள் சாவித்திரி, கண்களில் நீர் கலங்க.



"இல்லை அம்மா! நான் பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்தேன். குழந்தை தொந்தரவு பண்ணுகிறானே என்று அப்பாவிடம் விட்டேன். அதுக்கப்புறம் நான் அவனைப் பார்க்கவே இல்லை!"

"உன் பரீட்சையில் இடி விழ! அப்பா தான் அப்பவே கிளம்பி விட்டாரே! அப்பா பின்னாடியே குழந்தையும் தெருவுக்குப் போய்விட்டானோ என்னவோ?" என்று சொல்லும்போது சாவித்திரியின் குரல் கம்பியது.

இவ்வாறு பலவிதமான கேள்விகளும், குறுக்குக் கேள்விகளும், விசாரணைகளும் நடந்து கொண்டிருந்தன. ராமுவோ 'நாளைக்குப் பரீட்சையாயிற்றே, இப்படி நேரம் வீணாகப் போகிறதே' என்று துடித்துக் கொண்டிருந்தான். அவன் அம்மா சாவித்திரியோ குழந்தை இந்நேரம் எங்கே கிடக்கிறதோ என்று நினைத்துப் பொங்கிவரும் அழுகையை முன்தானையால் துடைத்துக் கொண்டிருந்தாள். பாட்டி நொடிக்கு ஒரு முறை 'அந்த வீட்டில் விசாரித்தாயா, இங்கே விசாரித்தாயா?' என்று நச்சரித்துப் பல தெய்வங்களுக்குப் பிரார்த்தித்துக் கொண்டாள். நடுவில் "அவன் வந்துட்டானா?" என்ற கேள்வி வேறு! "ஏண்டியம்மா! வாசுவைக் காணோமே! ஞாயிற்றுக் கிழமைகூடவா வீட்டிலிருக்கக் கூடாது? எங்கே அவ்வளவு அவசரமாகக் கிளம்பினான்?" என்று கேட்டாள் பாட்டி.

"என்னிடம் ஒன்றுமே சொல்லவில்லை! யாரோ சிநேகிதர் வீட்டிற்குப் போய்விட்டு ஒரு மணி நேரத்தில் வந்து விடுவதாகச் சொல்லிப் விட்டுப் போனார்" என்று சாவித்திரி கண்ணீருக்கிடையே பதில் அளித்தாள்.

இதற்குள் மணியாகி விட்டது. சமையல் அறையை எட்டிப் பார்த்தான் ராமு. சமையல் நடப்பதற்கான அறிகுறி ஒன்றையும் அங்கே காணோம். பசியோ வயிற்றைக் கிள்ளியது அவனுக்கு. அவன் தம்பி கிட்டுவும் அவனைப் போலவே கஷ்டப் பட்டுக் கொண்டிருந்தான். வீட்டில் குழந்தை காணாமல் போனது, அன்று சமையல் சாப்பாடு நடக்க வேண்டும் என்னும் பிரக்ஞையே இல்லாமல் செய்து விட்டது. இத்தனை குழப்பங்களும், கூச்சல்களும் ஒரு மணி நேரத்தில் நடைபெற்று விட்டன. எல்லோரும் அமைதியாக ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டு உட்கார்ந்து கொண்டிருந்தனர்.

ராமுவின் தம்பி, "அம்மா! அப்பா வருகிறார்!" என்று பெரிய குரலில் கூச்சலிட்டான். ஏதோ ஒரு புதிய பொருளைக் கண்டு விட்டது போன்ற உணர்ச்சி அவன் குரலில் காணப்பட்

# குழந்தை எங்கே?

என். ஜே.

அன்று ஞாயிற்றுக் கிழமை; அந்த வீடு ஒரே அல்லோல கல்லோலப்பட்டது. எல்லோருடைய முகங்களிலும் வருத்தக் குறி காணப்பட்டது. காரணம் கடைசிக் குழந்தை காணாமற் போய்விட்டதுதான்! பாவம், மிகவும் அழகாக, 'சொர்ண விக்ரகம்' என்று சொல்வார்களே, அதைப்போல் இருந்த குழந்தை திடீரென்று காணாமற் போய்விட்டது என்றால் அந்தக் குழந்தையைப் பெற்ற சாவித்திரிக்கு எப்படி யிருக்கும்!

"அடே ராமு, எதிர் வீட்டிலிருந்து யாராவது வந்து குழந்தையை அழைத்துக் கொண்டு போனார்களா என்று பார்த்து விட்டு வாடா! ஐயோ! குழந்தை எங்கே போனானோ தெரியவில்லையே!" என்று அவர்கள் வீட்டுப் பாட்டி ஒப்பாரி வைக்க ஆரம்பித்து விட்டாள். பாட்டி சொல்லை மீறாமல், பரீட்சைக்குப் படித்துக் கொண்டிருந்த ராமு, புத்தகங்களை எல்லாம் அப்படியே போட்டு விட்டு எதிர் வீட்டுக்குப் போனான்.

"அடே கிட்டு, அதற்குள்ளே நீ போய், பக்கத்து வீட்டிலே விசாரித்துவிட்டு வாடா!" என்று ராமுவின் தம்பியை அனுப்பினாள் பாட்டி. இதற்குள் ராமு திரும்பி வந்து விட்டான். "அவர்கள் நம் வீட்டிற்கு வரவே இல்லையாம், பாட்டி!" என்றான்; ராமுவின் தம்பி கிட்டுவும் அதேமாதிரி பதிலைக் கொண்டு வந்தான்.

குழந்தையைக் காணோம் என்று வீட்டில் உள்ளவர்கள் பதறிக் கொண்டிருந்த இந்தச் சமயத்தில் குழந்தையின் தகப்பனார் வாசுதேவனும் இல்லை. ஞாயிற்றுக் கிழமையாதலால் ஒரு நண்பரைப் பார்ப்பதற்கு அவர் நுங்கம்பாக்கத்துக்குப் போயிருந்தார்.

பாட்டி, அடிக்கடி ராமுவைக் கூப்பிட்டு, "அப்பா வந்து விட்டாரா என்று பாருடா!" என்று சொல்லிக் கொண்டேயிருந்தாள். சாவித்திரி வாசலுக்கும் உள்ளுக்குமாக நடந்து கொண்டிருந்தாள். எல்லோருடைய முகத்திலும் கலவரம் குடிகொண்டிருந்தது.



வீட்டில் ராமுவையும் கிட்டுவையும் தவிர வேறு யாரும் விவரம் தெரிந்த ஆண்கள் இல்லை. சாவித்திரியும் பாட்டியும் தங்களுக்குத் தெரிந்த உபாயங்களை யெல்லாம் கையாண்டு பார்த்தனர். எங்கெங்கு நண்பர்கள் வீடு இருந்ததோ, அங்கெல்லாம் ராமுவையும் அவன் தம்பியையும் அனுப்பி, குழந்தை இருக்கிறதா என்று பார்த்து வரச் சொன்னார்கள். இதற்குள் அண்டை வீட்டில் இருந்தவர்கள் எல்லாம் வந்து குழந்தை காணாமற் போனதைப் பற்றி விசாரிக்க ஆரம்பித்தனர்.

"அடடா! அந்தக் குழந்தையா காணாமல் போய்விட்டது? சிவப்பாக, கண்ணுக்கு அழகாக எப்படியிருந்தது? அதையா விட்டு விட்டீர்கள்......?"

"குழந்தைகளை எப்பவும் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ள வேண்டுமே, அம்மா? இந்தக் காலத்திலே தனியாக விட்டுவைக்கலாமா?"

"ஏன் அம்மா! குழந்தைக்கு நகை 'கிகை' போட்டிருந்தீர்களா? எவனாவது யாரும் இல்லாத சமயமாகப் பார்த்து, தூக்கிண்டு போயிருந்தாலும் இருக்கலாம். குழந்தையை ஒருவர் பொறுப்பாகக் கவனித்துக்கொள்ளக் கூடாதோ?"

பி. எச். டி. என்று பட்டங்கள்தான் வாங்கு; உலகானுபவத்திலும் வாழ்க்கை அநுபவத்திலும், பலத்திலும் நீ என்னை மிஞ்ச முடியாது; முடியவே முடியாது. புஸ்தகம் படிப்பதனால் புத்தி வந்துவிடாது. நம் தாயார் ஒரு வகுப்பிலும் படித்துத் தேறவில்லை. அப்பா ஐந்தாம் வகுப்பு பட்டுமோ ஆறாம் வகுப்பு மட்டுமோ தான் படித்திருக்கிறார். இந்த உலகத்தில் உள்ள படிப்பு அனைத்தையும் நாம் படித்துவிட்டு வந்தாலும் அப்பாவுக்கும் அம்மாவுக்கும் நம்மைச் சீர்திருத்தவோ, கடிந்து கொள்ளவோ உரிமை உண்டு. அவர்கள் நமக்கு அம்மா - அப்பா என்பதனால் மட்டும் அவர்களுக்கு இந்த உரிமை உண்டு என்று நான் சொல்ல வரவில்லை. ஆனால் அவர்களுக்கு நம்மைக்காட்டிலும் உலகானுபவம் அதிகம்.

“ஒரு பேச்சுக்காகச் சொல்கிறேன். நெருப்பு என்றால் வாய் வெந்து விடாது. இன்று நான் நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாகி விடுகிறேன் என்று வைத்துக் கொள். உனக்கு ஒன்றும் புரியாது. நீ பயந்து சாவாய். அப்பாவுக்குத் தந்தி அடிப்பதைத் தவிர உனக்கு வேறொரு வழியும் தெரியாது. ஆனால் உனக்குப் பதிலாக அப்பா இங்கே இருந்தால் யாருக்கும் தந்தி அடிக்கமாட்டார். முதலில் தனக்குத் தெரிந்த சிகிச்சையைச் செய்து குணமாக்க முயலுவார். நோய் குணம் அடையவில்லை என்றால், யாராவது ஒரு டாக்டரைக் கூப்பிட்டுக் காண்பிப்பார்.

“வியாதி பெரிய விஷயம். அது ஒருபுறம் இருக்கட்டும். நீயும் நானும் இருக்கிறோமே, மகா மேதாவிகள்! மாதாந்திரச் செலவுக்கு அப்பா கொடுக்கும் பணத்தை மாதாந்திரச் செலவுக்குச் சரிக்கட்டத் தெரியாமல் ‘திரு திரு’வென்று விழிக்கிறோம். அவர் அனுப்பும் பணத்தை இருபது இருபத்தைந்து தேதிக்குள் செலவு செய்துவிட்டு, அப்புறம் ‘காசு காசு’ என்று காசுக்கு என்ன வழி செய்வது என்று தெரியாமல் தவிக்கிறோம். அப்புறம் எதற்குமே ‘கட்-மோஷன்’தான்! காலைக் காப்பியா? நிறுத்திவிடு. சலவைக்குத் துணி போடுவதா? ஒன்றாம் தேதிக்கு மேல் பார்த்துக் கொள்ளலாம். எப்படியாவது இருக்கிற அழுக்குத் துணிகளைக் கட்டிக் கொண்டு சொச்ச நாளை ஓட்டுவோம் என்றெல்லாம் நாம் கஷ்டப்படுகிறோம். ஆனால் இன்று நீயும் நானும் ஊதாரித் தனமாகச் செலவு செய்யும் பணத்தில் பாதியை வைத்துக் கொண்டு அப்பா தன்னுடைய பெரிய குடும்பத்தை மானமாக, மிகவும் கௌரவமாக நடத்தியிருக்கிறார். அவரைப் போல் செட்டும் சிக்கனமுமாக நமக்கு எங்கே வாழத் தெரிகிறது?

“தம்பி! இதெல்லாம் எதற்காகச் சொல்லுகிறேன் என்றால் மனிதனுக்கு உலகானுபவம்தான் முக்கியம். அண்ணாவின் வகுப்பை நெருங்கிவிட்டோமே என்று எண்ணிக் கர்வம் கொள்ளாதே! நம்மை இனி யாரும் கட்டிப் பிடிக்க முடியாது என்னும் எண்ணத்தை விட்டுவிடு. நான் இருக்கும்பொழுது நீ தீய வழியில் செல்ல முடியாது. என் சொல்லைக் கேட்காவிட்டால் கன்னத்தில் அறைந்து சரியான வழிக்குத் திருப்புவேன். நான் சொல்வதெல்லாம் உனக்கு விஷமாகத் தோன்றலாம். இருந்தாலும் உன்னைத் திருத்தும் உரிமை எனக்கு உண்டு” என்றார்.

அவருடைய அந்தப் புதிய யுக்தியைக் கேட்டதும் நான் தலை கவிழ்ந்துவிட்டேன். ‘நான் சிறியவன்தான். சந்தேகமில்லை! என்ற எண்ணம் அன்றுதான் எனக்கு முதன்முதலாக ஏற்பட்டது. அண்ணாவிடம் எனக்கு அளவு கடந்த பக்தியும் சிரத்தையும் உண்டாயிற்று. “சரிதான் அண்ணா! தாங்கள் சொல்வது முற்றிலும் உண்மையான வார்த்தை. என்னைக் கடிந்து சரியான வழியில் கொண்டு வரத் தங்களுக்குப் பூரண உரிமை உண்டு. இனி நான் தங்கள் சொல்லைத் தட்டமாட்டேன்” என்று கண்களில் நீர் ததும்பக் கூறினேன்.

அண்ணா என்னை அப்படியே வாரி அணைத்துக் கொண்டார். “நான் உன்னைப் பட்டம் பறக்க விடவேண்டாமென்று சொல்லவில்லை. எனக்கும் பட்டம் பறக்க விடுவது என்றால் ஆசையாகத்தான் இருக்கிறது. ஆனால் என்ன செய்வேன்? தமையனான நானே கெட்ட வழியில் செல்வதென்றால் உன்னை எப்படிச் சரியான வழிக்குக் கொண்டு வரமுடியும்? உன்னைச் சீர்திருத்தும் மாபெரும் கடமை என் தலையில் அல்லவா அமர்ந்திருக்கிறது!” என்றார்.

தற்செயலாக அப்போது அறுந்த பட்டம் ஒன்று எங்கள் தலைக்கு நேரே வந்தது. அறுந்த கயிறு தொங்கிக் கொண்டிருந்தது. பையன்கள் அதைத் துரத்திக் கொண்டு ஓடி வந்தார்கள். என்னுடைய அண்ணாதான் சற்று உயரமாயிற்றே! ஒரே தாவாகத் தாவி அந்தக் கயிற்றைப் பிடித்துக் கொண்டார். அடுத்த கணம் வெகு வேகமாக ஹாஸ்டலை நோக்கி ஓடினார். நானும் அவருக்குப் பின்னாலேயே ஓடினேன்.

# கோப உபாக்கியானம்..



மானேஜர் சந்திரமூர்த்தி ஒரு காரணமும் இல்லாமல் ஹெட் கிளார்க்கைக் கோபிக்க,



...அந்தக் கோபத்தை ஹெட் கிளார்க்கு குமாஸ்தா நிரபராதியின்மேல் காண்பிக்க,



நிரபராதி, தனக்கு அடுத்தாற்போல் யார் என்று தேடிப் பிடித்துப் பியூன் பராங்குசத்தின்மேல் 'வள் வள்' என்று விழ......



..பியூன் தன் ஆத்திரத்தை ஜாக்கிரதையாக வீட்டுக்கு எடுத்துச் சென்று தன் மனைவியைப் படாதபாடு படுத்தினான்.




...பியூன் மனைவி அந்தக் கோபத்தில் தன் குழந்தையை நாலு அறை விட்டுக் கோபத்தைத் தீர்த்துக் கொண்டாள்.



..குழந்தை குணசேகரன், பொம்மை ராஜாவின்மேல் தன் கோபத்தைத் திருப்பி, அதை உடைத்து எறிந்து விட்டான்.

முற்றிற்று

அவர் இரவு பதினொரு மணி வரைக்கும் படிப்பார். பிறகு விடியற் காலை நாலு மணிக்கு எழுந்திருந்தால் பள்ளிக்குப் புறப்படும் நேரம் வரையிலும் படிப்பார். படித்துப் படித்து அண்ணா புஸ்தகத்தையே கரைத்துக் குடித்து விட்டார்! அவர் படித்த படிப்பில் அவருடைய முகம் மாங்கொட்டை போல் ஒட்டி உலர்ந்து விட்டது; உடல் கரைந்து உருவற்றுப் போய்விட்டது. அவ்வளவு படித்தும் கடைசியில் அவர் பெயிலாகி விட்டார். அதை நினைக்க நினைக்க எனக்கு ஒருபுறம் வியப்பாக இருந்தது. இன்னொரு புறம் அண்ணாவின் நிலையை எண்ணி மிகவும் மனம் புழுங்கினேன். பரீக்ஷை முடிவு தெரிவித்த பொழுது, அண்ணா அழுதே விட்டார். அவரைப் பார்த்த நானும் அழுது விட்டேன். எனக்குப் பரீக்ஷையில் தேறியதில் சிறிதும் சந்தோஷம் உண்டாகவில்லை. நான் தேறாமல் இருந்தால் அண்ணாவுக்கு அவ்வளவு துயரம் ஏற்பட்டிருக்காதோ என்னவோ? ஆனால் விதியின் சதியை என்னவென்று சொல்லுவது?

எனக்கும் அண்ணாவுக்கும் இப்பொழுது ஒரே ஒரு வகுப்பு மட்டும்தான் வித்தியாசமிருந்தது. 'அடுத்த வருஷமும் அண்ணா பரீக்ஷையில் 'கோட்' அடித்துவிட்டால் நானும் அவருடைய வகுப்புக்குப் போய் விடலாம் அல்லவா? அப்புறம் அண்ணாவுக்கு என்னைத் திட்டவோ, அவமானப் படுத்தவோ வாய் ஏது?' என்ற கெட்ட எண்ணம் என் உள்ளத்தில் எழுந்தது. ஆனால் அந்தக் கெட்ட எண்ணத்தை அடுத்த கணமே நான் என் உள்ளத்திலிருந்து களைத்தெறிந்தேன். அண்ணா என்னைத் திட்டுவது எல்லாம் என்னுடைய நன்மைக்குத்தானே? அவர் திட்டும் பொழுது மனதுக்கு என்னவோ சற்றுச் சிரமமாகத் தான் இருக்கிறது. இருந்தாலும் அவருடைய உபதேசங்கள் காரணமாகத்தான் நாம் ஒவ்வொரு வகுப்பிலும் 'தடதட' வென்று தேறி வருகிறோம். அதுவும் நல்ல மார்க்குகள் வாங்கித் தேறி வருகிறோம் என்ற எண்ணம் என் உள்ளத்தில் எழுந்து ஒருவித அமைதியை அளித்தது.

இப்பொழுதெல்லாம் அண்ணா என்னை அவ்வளவாக ஏசுவதும் இல்லை; திட்டுவதும் இல்லை. என்னைத் திட்ட வேண்டிய அநேக சந்தர்ப்பங்கள் வந்தும் அவர் பொறுமையாகப் பேசாமல் இருந்திருக்கிறார். என்னை அதட்டி உருட்ட இனி தனக்கு உரிமையில்லை என்றுதான் எண்ணினாரோ, அல்லது உரிமையிருந்தாலும் முன்னைப் போல அதட்டி உருட்ட வேண்டாம் என்று தான் விட்டுவிட்டாரோ, எனக்குத் தெரியாது! அம்மாதிரி எனக்கு இடம் கொடுக்கவே என் நான்தோன்றித் தனமும் வரவர அதிகமாயிற்று. நான் அவருடைய பொறுமையைச் சோதிக்க ஆரம்பித்து விட்டேன். நாம் படித்தாலும் படிக்காவிட்டாலும் கட்டாயம் பாஸ் செய்து விடுவோம், நம்மை மிஞ்சிய அதிர்ஷ்டசாலிகள் இந்த உலகத்தில் யாருமே கிடையாது என்ற எண்ணம் என் உள்ளத்தில் வலுத்தது. ஆகவே அண்ணாவுக்குப் பயந்து கொஞ்சநஞ்சம் படித்துக் கொண்டிருந்தேனே, அதையும் நாளாவட்டத்தில் நிறுத்தி விட்டேன்.

மேல் காற்றுக் காலம். பையன்கள் எல்லாரும் பட்டம் பறக்க விட்டுக் கொண்டிருந்தார்கள். எனக்கும் பட்டம் பறக்க விடவேண்டும் என்ற புது ஆசை உதித்தது. நான் பொழுது முழுவதையும் பட்டம் பறக்க விடுவதில் செலவிடலானேன். என்ன இருந்தாலும் என் அண்ணாவிடம் இருந்த பயம் குறையவில்லை. ஆகவே அவருக்குத் தெரியாமல் பட்டம் பறக்க விட்டு வந்தேன். பசை காய்ச்சிப் பட்டம் ஒட்டுதல், பட்டம் பறக்க விடுவதற்காகப் பையன்களைச் சேர்த்தல் முதலிய காரியங்களையெல்லாம் நாங்கள் காதும் காதும் வைத்தாற்போல் செய்யலானோம். 'நான் அவரை அவமதிப்பதாக அண்ணா எண்ணிவிடக் கூடாதே!' என்பதற்காக அவருக்கு எந்த விஷயத்திலும் சிறிதும் சந்தேகம் ஏற்படாத வகையில் நான் நடந்து கொள்ளலானேன்.

ஒரு நாள் மாலை நேரத்தில் நான் ஒரு பட்டத்தை எடுத்துக்கொண்டு ஹாஸ்டலுக்கு வெகு தூரத்தில் இருந்த மைதானத்தில் வெகு வேகமாக ஓடிக் கொண்டிருந்தேன். என் கண்கள் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்த வண்ணமே இருந்தன. என் பின்னாலேயே பல பையன்கள் கோலாகலமாகக் கூச்சல் போட்டுக்கொண்டு ஓடிவந்து கொண்டிருந்தனர். யாருக்குமே இந்த உலகத்து ஞாபகமோ, தன் நினைவோ இல்லை. பிரும்ம ஞானத்திலே ஆழ்ந்திருக்கும் சாதகனைப் போல, எங்கள் எல்லாருக்கும் அந்தப் பட்டம் ஒன்றுதான் லட்சியமாக குறிக்கோளாக இருந்தது.

சிவ பூஜை வேளையில் கரடி விட்ட கதையாக, நடுவில் அண்ணாவைச் சந்திக்கும்படியாகிவிட்டது. அவர் கடைத் தெருவுக்குப் போய்விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தார் போலிருக்கிறது. அவர் என் கையைப்

கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். பிறகு மிகவும் கடுமையான குரலில், "இந்த ஊர் சுற்றிக் காவாலிப் பயல்களுடன் கால் காசு கூடப் பெறாத காற்றடிக்காக ஓடித் திரிவதில் உனக்கு வெட்கமாயில்லை? நீ முன்னைப் போலக் கீழ் வகுப்பில் படிக்கவில்லை. உயர் வகுப்பில் படிக்கிறாய். உனக்கு உன் மரியாதையைக் காப்பாற்றிக் கொள்ளத் தெரிய வேண்டாமா? நீ இப்பொழுது எட்டாம் வகுப்பில் படிக்கிறாய். என்னைவிட ஒரே ஒரு வகுப்புத்தான் குறைச்சல். மனிதன் தன் அந்தஸ்தைக் கவனித்து அதற்கேற்றவாறு நடந்து கொள்ள வேண்டாமா? ஒரு காலத்திலே எட்டாம் வகுப்புப் படித்தவர்களில் எத்தனையோ பேர் பெரிய பெரிய உத்தியோகங்கள் பார்த்திருக்கிறார்கள். இன்றுகூட எத்தனையோ எட்டாம் கிளாஸ் பேர்வழிகள் சமூக தலைவர்களாகவும், பத்திரிகை ஆசிரியர்களாகவும் இருக்கிறார்கள். நீ என்னடாவென்றால், அதே எட்டாம் வகுப்பில் படித்துக்கொண்டு, ஊர் சுற்றித் திரியும் காவாலிப் பயல்களுடன் பட்டம் பறக்க விட்டுக்கொண்டு சுற்றித் திரிகிறாய்? உன் முட்டாள்தனத்தை என்னவென்பது?

"நீ புத்திசாலிதான்; சந்தேகமில்லை. ஆனால் உன் புத்திசாலித்தனம் எல்லாம் எதற்குப் பிரயோஜனம்? தன் மரியாதையைத் தானே குறைத்துக் கொள்வதென்றால். தன் காலில் தானே கோடரியைப் போட்டுக் கொள்வதுபோல் அல்லவா இருக்கிறது? அண்ணனைக் காட்டிலும் நாம் ஒரே ஒரு வகுப்புத்தானே கீழாக இருக்கிறோம்? நமக்குப் புத்தி சொல்வதற்கு இவன் யார் என்று நீ எண்ணிக் கொண்டிருக்கலாம். அப்படி எண்ணினாயானால் அது உன்னுடைய மூளைக் கோளாறுதான். உன்னைவிட நான் எப்படியும் பெரியவன், தெரியுமா? அந்த வருஷம் நீ என்னுடைய வகுப்புக்கே வந்தாலும் வந்துவிடலாம். பரீக்ஷை அதிகாரிகள் நினைத்தால் அதற்கு அடுத்த வருஷம் நீ என்னைவிட ஒரு வகுப்பு மேலே போய்விடவும் கூடும். இதில் எல்லாம் ஆச்சரியப் படுவதற்கு ஒன்றும் இல்லை. ஆனால் உனக்கும் எனக்கும் இடையே ஐந்து வருஷ வித்தியாசம் இருக்கிறதே, அது ஒருக்காலும் குறையாது; மாறவும் மாறாது. நான் உன்னைவிடப் பெரியவன் பெரியவன்தான். படைத்த பிரமனே வந்தாலும் இந்த வயது வித்தியாசத்தை மாற்ற முடியாது. நீ பி. ஏ. தான் பாஸ் பண்ணு; அல்லது எம். ஏ.

காலக் கட்டுப்பாட்டைப் பற்றிச் சுருக்கமாக நாலு பக்கங்களுக்குக் குறையாமல் எழுத வேண்டுமாம். 'சுருக்கமாக எழுது' என்று சொல்லும் போதே நீளக் காகிதத்தில் நாலு பக்கங்கள் என்றால் 'விரிவாக எழுது' என்று சொல்லி விட்டால் எவ்வளவு பக்கங்கள் எழுத வேண்டுமோ? அது அந்தக் கடவுளுக்குதான் வெளிச்சம்! ஒருவேளை இருநூறு மூந்நூறு பக்கங்கள் எழுத வேண்டுமோ, என்னவோ? வேகமாகவும் ஓட வேண்டும். அதே சமயத்தில் மெதுவாகவும் நடக்க வேண்டும் என்றால் அது எங்கேயாவது நடக்கக் கூடிய காரியமா? சின்னஞ் சிறு குழந்தைக்குக்கூட இது நடக்கவே நடக்காத காரியம் என்பது நன்றாகத் தெரியுமே! ஆனால் இந்த வாத்தியார்களுக்கு இவ்வளவு மூளை ஏது? ஆனால் அவர்கள் 'நாங்கள் உபாத்தியாயர்களாக்கும்!' என்று சொல்லி மார் தட்டிக் கொள்வதைப் பார்க்க வேண்டுமே!



"அது போகட்டும், தம்பி! என் வகுப்புக்கு வந்துவிட்டால் உனக்குப் போதும் போதும் என்றாகிவிடும். படிப்புக்கு ஒரு முழுக்குப் போட்டுவிட்டு ஓடிப் போய்விடலாமா என்று கூடத் தோன்றும். இந்த வகுப்பில் முதலாவதாகத் தேறியதற்கே உனக்குப் பூமியில் கால் பாவவில்லையே! அதற்காகத்தான் இவ்வளவும் சொல்லுகிறேன். கேள், பிரதர்! நான் என்னதான் 'பெயிலா'கப் போனால் என்ன? வயதில் உன்னைவிடப் பெரியவன். உன்னைக் காட்டிலும் எனக்கு உலகாநுபவம் எத்தனையோ மடங்கு அதிகம். நான் சொல்வதையெல்லாம் முடிந்து வைத்துக்கொள். இல்லாவிட்டால் பின்னால் ரொம்பவும் வருத்தப்பட நேரும்!" என்று உபதேசம் செய்தார்.

பள்ளிக்கூடத்துக்குப் புறப்படுவதற்கு நேரமாகி விட்டது. இல்லாவிட்டால் அந்த உபதேசச் சங்கிலி எத்தனை தூரம் ஹனுமார் வால் போல நீண்டு கொண்டே போயிருக்குமோ, கடவுள்தான் அறிவார்! அன்று முழுதும் எனக்கு ஆகாரமே செல்லவில்லை. சாப்பிட்ட சாப்பாடும் சாப்பிட்டாற் போலில்லை. பரீக்ஷையில் தேறியதற்கே இவ்வளவு பாடு என்றால், 'பெயிலா'கிப் போயிருந்தால் என் உயிரே போயிருந்திருக்குமோ, என்னமோ? அண்ணா தன்னுடைய வகுப்பின் பாட திட்டங்களைப் பற்றி வர்ணித்த பயங்கர வர்ணனையைக் கேட்டு நான் கதி கலங்கியே போய்விட்டேன். பள்ளிப் படிப்புக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டு வீட்டுக்கு ஓட்டம் பிடிக்காமல் இருந்தேனே, அதுதான் எனக்கு ஆச்சரியத்திலும் ஆச்சரியமாக இருந்தது. அண்ணா இவ்வளவு 'டோஸ்' கொடுத்த பின்பும்கூட எனக்குப் புத்தகங்களின் மீதுள்ள வெறுப்புக் குறையவில்லை. விளையாடும் நேரத்தை நான் வீணாக அடிப்பதே யில்லை. அதற்காக ஒரேயடியாகப் படிக்காமலும் இருந்ததில்லை. விளையாட்டில் மிஞ்சின நேரத்தைச் சிறிது படிப்பதிலும் செலவிட்டேன். முழுமுட்டாள் என்று பட்டம் வாங்கி அவமானப்பட்டுப் போகக் கூடாதல்லவா? காலாவட்டத்தில் அந்த எண்ணமும் அமுங்கி விடவே திருடனைப்போல் வெளியேறி விளையாட்டிலேயே பொழுது முழுவதையும் கழிக்கலானேன்.

## 3

பிறகு வருஷாந்திரப் பரீக்ஷை வந்தது. அந்தத் தடவையும் என் அதிர்ஷ்டத்தை என்னவென்று சொல்வது? பரீக்ஷையில் தேறிவிட்டேன். அதுவும் பரீக்ஷைக்கென்று அதிகம் படிக்காமலேயே வகுப்பில் முதலாவதாகத் தேறிவிட்டேன். ஆனால் அண்ணா பரீக்ஷையில் தேறவில்லை. அண்ணா உயிரைப் பிடித்துக் கொண்டு படித்தார்.

இல்லை, இரண்டு லட்சம், இல்லை, பத்து லட்சம் பெயர் வேண்டுமானாலும் சொல்லி விருப்பேன். அது போகட்டும். இந்த ஜாமெட்டரி இருக்கிறதே! அப்பப்பா! இதன் தொல்லையிலிருந்து கடவுள்தான் நம்மைக் காப்பாற்ற வேண்டும். ஏ. பி. ஸி. என்று எழுதுவதற்குப் பதிலாகக் கை தவறி ஏ. ஸி. பி. என்று எழுதி விட்டால், அப்புறம் மார்க்கு அரோஹராதான்!

"இந்தப் பரீக்ஷை அதிகாரிகள் இருக்கிறார்களே, அறுத்த கைக்குச் சுண்ணாம்பு கொடுக்க மாட்டார்கள். அவ்வளவு கருமிகள்! ஏ. பி. ஸி. என்று எழுதினால் என்ன, ஏ. ஸி. பி. என்று எழுதினால் என்ன? இவர்களுக்கு அதில் என்ன குடிமுழுகிப் போய் விடும்? அதற்காகப் பையன்களின் உயிரை வாங்க வேண்டுமா? சாதம், கறி, குழம்பு, ரஸம், மோர் சாப்பிட்டேன் என்று ஒருவன் சொன்னால் என்ன? குழம்பு, கறி, சாதம், மோர், ரஸம் சாப்பிட்டேன் என்று சொன்னால் என்ன? இரண்டிலும் அப்படியென்ன பெரிய வித்தியாசம் வந்துவிடப் போகிறது? ஆனால் இந்தப் பரீக்ஷை அதிகாரிகளுக்கு அதையெல்லாம் கவனிக்கப் பொழுது எங்கே? புத்தகத்தில் என்ன எழுதியிருக்கிறதோ அதையே பையன் எழுதியிருக்கிறானா என்றுதான் பார்க்கிறார்கள். பையன்கள் எழுத்துக்கு எழுத்து அப்படியே பொட்டை நெட்டுருச் செய்து எழுத வேண்டுமாம்! 'கரைதலை'யாகப் பொட்டை நெட்டுருப் போட்டு ஒப்பிப்பது தான் இவர்கள் எண்ணத்தில் படிப்புப் போலும்! இந்தக் கண்ணராவியை என்னவென்று சொல்வது? பத்துக் கைகள் இருந்தாலும் போதாத நிலையில் அடித்துக் கொள்ளுவதற்கு! தலைகால் தெரியாத இந்தப் படிப்பைப் படித்து யாருக்கு என்ன பிரயோஜனம்? இதைப் படித்து யார் என்ன ஸாயுஜ்யத்தை அடையப் போகிறார்கள்? இதையெல்லாம் சொல்லப் போனால் பரீக்ஷையில் 'கோட்' அடிக்க வேண்டியது தான்! பரீக்ஷை பாஸ் ஆகவேண்டும் என்றால், அப்பனுக்கு ஒரு குரல் அழுது கொண்டு இன்னலையும் படித்துத்தான் ஆக வேண்டும்.

"'காலக்கட்டுப்பாடு' என்னும் பொருள் பற்றி நான்கு பக்கங்களுக்குக் குறையாமல் ஒரு கட்டுரை வரைக என்பது ஒரு கேள்வியாம்! உனக்குப் பரீக்ஷையில் தேறவேண்டும் என்ற நோக்கமிருந்தால், நீ நோட்டுப் புத்தகத்தைத் திறந்து வைத்துக் கொண்டு பேனாவைக் கையில் பிடித்துக் கொண்டு, காகிதத்தில் ஏதாவது எழுதித்தான் ஆகவேண்டும். காலக்கட்டுப்பாடு என்பது நல்லதுதான். இந்த விஷயம் யாருக்குத்தான் தெரியாது? இதனால் மனிதனுடைய வாழ்க்கையில் ஒருவித ஒழுங்கு முறை ஏற்படுகிறது. நேரத்தை வீணாக்காதவர்களை எல்லோருமே நேசிக்கிறார்கள். வியாபாரத்தில் விருத்தி ஏற்படுகிறது. இதெல்லாம் உண்மைதான். ஆனால் இந்தச் சின்னஞ் சிறு விஷயத்தைப் பற்றி நான்கு பக்கங்கள் எழுத வேண்டுமென்றால் எப்படி எழுதுவது? ஒரே வாக்கியத்தில் சொல்லி முடித்துவிடக் கூடிய விஷயத்துக்கு நாலு பக்கம் காகிதத்தில் மையைக் கொட்டி மெழுகுவானேன்? என்னைக் கேட்டால் இதை நான் அடிமுட்டாள்தனம் என்றுதான் சொல்லுவேன். காலக் கட்டுப்பாடு என்ற பெயரில் காலத்தை வீண் விரயமாக்குவது என்றுதான் சொல்லுவேன்.



அனாவசியமாக நாலு பக்கங்கள் எழுதச் சொல்லி யாராவது பொழுதை வீணாக்குவார்களா? சொல்ல வேண்டியதைச் 'சட்டுப்புட்'டென்று சொன்னால் அல்லவா அழகு! ஆனால் நான்கு பக்கங்கள் மையைக் கொட்டி மெழுகினால் தான் ஆயிற்றென்று விடாப் பிடியாகச் சொல்லுவது எந்த ஊர் நியாயம்?

"மாணவர்கள் மீது பரீக்ஷை என்னும் இந்த மகா பாதகத்தைச் சுமத்துவது மாபெரும் அநீதி அல்லவா? இதில் இன்னுமொரு வேடிக்கை என்னவென்றால்




ஆசிரியர்: பிரேம் சந்த் மொழிபெயர்ப்பு: அக்ஷயம்

(சென்ற வாரத் தொடர்ச்சி)

அண்ணாவின் முகத்தையே பார்த்தவாறு நின்று கொண்டிருந்தேன். அவர் அடுத்த கணமே, "அது போகட்டும், சாத்தானின் கதை உனக்குத் தெரியும் அல்லவா? அவன் தன்னைக் காட்டிலும் கடவுள் பக்தி உள்ளவன் உலகத்தில் யாருமே கிடையாது என்று மார் தட்டிக் கொண்டிருந்தான். அதன் பலனாகக் கடைசியில் அவன் சொர்க்கத்திலிருந்து நரகத்தில் பிடித்துத் தள்ளப்பட்டான். ருமானியச் சக்கரவர்த்தி ஒரு தடவை அகந்தைக்கு ஆளானான். அதன் பலனாகப் பிச்சைப் பிழைப்புப் பிழைத்துச் சாகும்படியான கதி அவனுக்கு ஏற்பட்டது. இதெல்லாம் எதற்காகச் சொல்லவந்தேன் என்றால், நீ இப்பொழுதுதான் என்னவோ ஒரு வகுப்புத் தேறியிருக்கிறாய். அதற்குள்ளாகவே உனக்கு மண்டைக் கர்வம் ஏறிவிட்டது. இனிமேல் நீ உருப்பட்டாற் போலத்தான்! தம்பி! நீ உழைத்துத் தேறவில்லை. குருட்டுப் பூனை விட்டத்தில் பாய்ந்தது என்பார்களே, அந்தக் கதையைப்போல் ஏதோ எதேச்சையாகத் தேறி விட்டாய்! குருட்டுப் பூனை ஒரு தடவை வேண்டுமானால் விட்டத்தில் தாவ முடியும். அடிக்கடி தாவ ஆரம்பித்தால் அதன் ஜம்பம் சாயுமா?

"கிட்டிப் புள் ஆட்டத்தில் குருட்டாம் போக்கில் ஒரு தடவை ஒருவன் குறி சரியாக வைத்து விட்டால், அவனைப் பெரிய ஆட்டக்காரன் என்று யாரும் சொல்லிவிட மாட்டார்கள். ஆட்டக்காரன் என்று பெயர் வாங்க வேண்டுமானால் ஒரு தடவை தப்பிக் கூடக் குறி தவறக் கூடாது. அவனைத் தான் ஆட்டக்காரன் என்று சொல்ல முடியும். நான் பரீக்ஷையில் தேறவில்லையே என்று சொல்ல வராதே! என் வகுப்புக்கு நீ வரும்பொழுது உன் பல் உடைபட்டுப் போகும். 'அல்ஜீப்ரா'வும் 'ஜாமெட்டரி'யும் உன்னைக் கசக்கிப் பிழிந்துத் திக்கு முக்காட வைத்து விடும்.

"இங்கிலாந்து தேசச் சரித்திரம் வேறு படித்தாக வேண்டும். அரசர்களின் பெயரை நினைவு வைத்துக் கொள்ளுவது இலேசான காரியம் இல்லை. ஒரு ஹென்றி இரண்டு ஹென்றி இல்லை; எட்டு ஹென்றிக்கள் இருந்திருக்கிறார்கள். எந்தச் சம்பவம் எந்த ஹென்றி காலத்தில் நடந்தது என்பதை ஞாபகம் வைத்துக் கொள்ளுவது சுலபமான காரியம் என்று எண்ணாதே, தம்பி! ஏழாவது ஹென்றி என்று எழுதுவதற்குப் பதிலாக எட்டாவது ஹென்றி என்று எழுதி விட்டால் அப்புறம் மார்க்கு மார்க்குத்தான்! பரீக்ஷையும் அழித்துவிடும். என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய்? வில்லியம்களும் ஜேம்ஸ்களும் டஜன் டஜனாக இருக்கிறார்கள். சார்லஸ்களோ கோடிக்கணக்கில் இருக்கிறார்கள். அவர்களைக் கணக்கிட்டுச் சொல்ல முடியாது. இதையெல்லாம் படிக்கும் பொழுது மூளை குழம்பி விடும். ரத்தம் தலைக்கேறி விடும்.

"நம் நாட்டிலே அரிசிப் பஞ்சம், சர்க்கரைப் பஞ்சம் ஏற்பட்டிருப்பதைப்போல, பெயர்ப் பஞ்சமும் அல்லவா இந்த ஆங்கிலேயர்களுக்கு ஏற்பட்டு விட்டது! இந்த அல்பாயுசுக்காரப் பசங்களுக்கு வேறு பெயரே கிடைக்கவில்லை போலிருக்கிறது. ஒருவன் பெயருக்குப் பின்னால் ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து என்று கூட்டிக்கொண்டே போயிருக்கிறார்கள்! என்னைக் கேட்டிருந்தால் ஒரு லட்சம்

# படித்துப் பார்!

## அந்த நாள்

மலேயா நாட்டின் மாண்புக்குத் தங்கள் உழைப்புச் சக்தியை அளித்தவர்கள் தமிழ் மக்கள்; பர்மா நாட்டைப் பண்படுத்தி அதன் வளத்துக்குப் பாடுபட்டவர்கள் தமிழ் மக்கள். அவர்கள் யுத்த காலத்தில் மனைவி மக்களையும், வீடு வாசலையும், உற்றார் உறவினரையும் விட்டுக் கால் நடையாகத் தாய் நாட்டுக்கு ஓடி வர நேர்ந்த சோக சித்திரத்தைப் பேராசிரியர் மு. வரதராசனார் இந்நூலில் சித்திரித்திருக்கிறார். சம்பவங்களெல்லாம் நேருக்குநேர் பார்த்த மாதிரி அமைந்திருக்கின்றன.

"போர் மக்களை ஏமாற்றுவது; துன்புறுத்துவது; அச்சுறுத்துவது; ஆகையால் அது பாவமானது. போருக்காக ஏற்படுத்தப்படும் ஏற்பாடுகள், போருக்காகக் கற்பிக்கப்படும் கலைகள், போருக்காகச் செய்யப்படும் செயல்கள் எல்லாம் மன்னிக்க முடியாத குற்றங்கள்..."

இந்தத் தத்துவம்தான் இக்கதைக்கு அடிநாதமாக அமைந்திருக்கிறது. புத்தகத்தின் மேலட்டையில் அமைந்திருக்கும் சித்திரம் கண்ணையும் கருத்தையும் கவருகிறது. பிரசுரம்: இன்ப நிலையம், மயிலாப்பூர், சென்னை 5. விலை ரூ. 3.

## இன்றையப் பேச்சு

## ஆதாரக் கல்வி

"பலவேறு பாடங்களைக் குழந்தைகளுக்குச் சொல்லி ஹிம்சை பண்ணுகிறீர்கள். அவற்றில் அவனுக்குச் சுவை உண்டாகும் படி செய்து அவற்றைக் கற்கும் வழியை மட்டும் காட்டினால் போதும். நீங்கள் கற்பித்தீர்கள் என்ற காரணத்தால் அவன் ஒன்றைத் தெரிந்து கொள்ள வேண்டாம்; தானாகக் கற்றுத்தான் அவன் எதுவும் அறிய வேண்டும். கலைகளைக் கற்பிக்க வேண்டியதில்லை; குழந்தை தானே கற்க வேண்டும். அவன் உள்ளத்தில் பகுத்தறிவை நீக்கி அதிகாரத்தைப் புகுத்தினால், பிறகு ஒரு போதும் பகுத்தறிவே அங்கு இராது. மற்றவர்களுடைய அபிப்பிராயத்தை எடுத்துக் கிளிப்பிள்ளை போல் சொல்லுபவனாகவே இருப்பான்" என்று பிரெஞ்சு அறிஞர் ரூஸோ கூறியிருக்கிறார். இதையொட்டிப் பார்த்தால் நம் நாட்டில் இப்போதுள்ள, கல்வி முறையின் தீமையைச் சுலபமாகப் புரிந்து கொள்ளலாம்.

இந்தத் தீமையை அடியோடு அகற்ற மகாத்மா காந்தி கல்வியில் ஒரு புரட்சிகரமான முறையைப் புகுத்தினார். அதற்கு **ஆதாரக் கல்வி** என்று மகாத்மா பெயர் தந்தார். ஆதாரக் கல்வித் திட்டத்தைப்பற்றி மகாத்மாவின் சீடர்களில் ஒருவரான ஆசாரிய கிருபலானி விரிவாக எழுதியிருக்கிறார். அந்த ஆங்கில நூலைத் தமிழில் இலகுவாக மொழி பெயர்த்து உதவியிருக்கிறார் ஸ்ரீ மு. அருணாசலம். பிரசுரம்: தமிழ் நூலகம், திருச்சிற்றம்பலம், மாத்தூறை போஸ்டு, குத்தாலம் வழி. விலை ரூ. 2—0—0.]

## கண் பாதுகாப்பு

கண் வியாதிகள் பெரும்பாலும் அற்பக் கோளாறிலிருந்துதான் ஆரம்பமாகின்றன. ஆனால் பிறகு பெரிய விபரீதமாகிக் கண் பார்வையே கெட்டு விடுகிறது. வியாதி ஆரம்பமானவுடனேயே கவனித்துத் தக்க ஆரம்ப சிகிச்சை செய்தால் அவற்றை இலகுவாகத் தடுத்து விடலாம். அதைப் பற்றித்தான் இப்புத்தகம் கூறுகிறது.

கண்ணில் தூசி விழுந்தால் என்ன செய்வது, கண் வலியைப் போக்குவது எப்படி, கண்ணில் காயம் உண்டானால் என்ன செய்வது முதலிய விஷயங்களை இப்புத்தகம் படங்களுடன் தெளிவாக விளக்குகிறது. கண்ணைப் பாதுகாக்க விரும்பும் ஒவ்வொருவரும் படிக்க வேண்டிய புத்தகம். விலை ரூ. 1; விலாசம்: டாக்டர் ஜோஸப் கண் ஆஸ்பத்திரி, திருச்சி.

## Agasthiar's guide to Social Studies

### Part I for Form V

சென்னை சர்க்கார் வகுத்திருக்கும் புதுக் கல்வித் திட்டத்தில் சமூக அறிவு நூல் (Social Studies) ஒரு முக்கிய ஸ்தானம் பெற்றிருக்கிறது. மனிதனுடைய நாகரிக வளர்ச்சியையும், சமுதாய தேசிய மேம்பாட்டை உருவாக்கிய இயக்கங்களையும் மாணவர்கள் உணர்ந்து நல்ல பொறுப்பு வாய்ந்த பிரஜைகளாக வாழ வேண்டும் என்பதுதான் இப்பாடத் திட்டத்தின் நோக்கம்.

இத் திட்டத்திற் கிணங்க இந்தப் புத்தகம் தயாரிக்கப் பட்டிருக்கிறது. நூல் முழுவதும் கேள்வி—பதில் முறையில் அமைந்திருக்கிறது. மாணவர்கள் படித்துப் பரீட்சையில் தேறுவதற்கு மிக்க உபயோகமாக இருக்கக் கூடிய புத்தகம். விலை ரூ. 1-4-0. ஆசிரியர்கள்: எஸ். ராமநாதன்; வி. எஸ். ஸ்ரீநிவாசன். பிரசுரம்: Agasthiar Book Depot, Teppakulam, Tiruchirapalli.


சண்டைகள் புரிந்து கவர்ச்சிகரமாக நடித்திருக்கிறார்கள்.
நடன நட்சத்திரமான குமாரி கமலா ஊர்வசியாகத் தோன்றி
ஆடி யிருக்கிறார். லலிதா - பத்மினி, வைஜயந்திமாலா
இவர்களும் நடனத் திறமைகளைக் காட்டி யிருக்கிறார்கள்.
"வேலைக்காரி" படத்தை டைரக்ட் செய்த ஸ்ரீ ஏ. எஸ். ஏ.
சாமிதான் இந்தப் படத்தையும் டைரக்ட் செய்திருக்கிறார்
என்றால், படத்தின் சிறப்பைக் குறித்து வேறு என்ன
சொல்ல வேண்டும்?

# ஜூபிடர் விஜயகுமாரி

இம்மாதம் 18வ. ஜூபிடரின் "விஜய குமாரி" தமிழ் நாடெங்கும் விஜயம் செய்கிறுள். சினிமா வானில் சுடர் விட்டுப் பிரகாசிக்கும் நடிக, நடன நட்சத்திரங்கள் பலர் இதில் ஒன்று சேர்ந்து நடிக்கிறுர்கள். ஜெமினியின் ஹிந்தி சந்திரலேகா மூலம் புகழ் பெற்ற டி. ஆர். ராஜகுமாரி கதா நாயகியாக வருகிறுர். "வேலைக்காரி" புகழ் கே. ஆர். ராமசாமியும் டி. எஸ். பாலையாவும் பிரமாதமான கத்திச்

கடைசியில் எங்கள் ஆறுபேரில் 'பொது சபையினர் நான்கு பேரைத் தள்ளி விட்டனர். பாக்கியிருந்த எனக்கும் மற்றவருக்கும் சம ஓட்டுகள் கிடைத்தன. இதைத் தெரிவிக்கவந்த கட்சி அதிகாரி எங்களைப் பார்த்து 'ரொம்ப அதிசயமாயிருக்கிறது. இதுவரை இப்படி நடந்ததே இல்லை. உங்கள் இருவருக்கும் சம ஓட்டுகள் கிடைத்திருக்கின்றன. ஆகையால் நீங்கள் இருவரும் மறுமுறை ஆளுக்கு ஐந்து நிமிஷம் பேசி, சபையினர் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் கூறவேண்டும்' எனக் கூறினார்.

இந்தப் பரீட்சையும் முடிந்தவுடன் கட்சி அதிகாரி வந்து 'நீங்கள்தான் கட்சி அபேட்சகர்' என்று கூறினார். எனக்கு மிகுந்த மகிழ்ச்சியும் திருப்தியும் ஏற்பட்டது. யாரோ ஒருவர் என்னைப் பார்த்து 'இனி உங்கள் வாழ்க்கை உங்களுடைய சொந்த விஷயமல்ல' என்று கூறுவது போலிருந்தது."

* * *

இம்மாதிரி அபேட்சகர்கள் பொறுக்குவதில் நமது காங்கிரஸ் ஸ்தாபனத்தினர் கவனம் செலுத்துவார்களா?

# வெட்டினால் துளிர்க்காது!

**வஸுமதி ராமஸ்வாமி**

சென்ற வாரம் 'கல்கி'யில் "கோபால ரெட்டிக்கு ஒரு கோரிக்கை" என்ற தலைப்பையுடைய கட்டுரையைப் படித்தேன். அதைப் பற்றி நானும் சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறேன். டி. கே. எஸ். சகோதரர்கள் நாடகங்களில் சில நான் பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது. அவர்கள் கடைசியாக நடத்திய "முதல் முழக்கம்" என்ற நாடகத்தின் கடைசி நாளான பிப்ரவரி 28-ம் தேதி அந் நாடகத்தை நான் பார்க்க நேர்ந்தது. வீராவேசம் பொங்க தமிழ் மரபின் பெருமையை மிகவும் அழகாக எடுத்துக் காட்டும்படி நடித்து அந்த நாடகத்தைச் சிறப்பித்திருந்தார்கள். அன்று அவர்கள் நடத்துவது கடைசி நாடகமாயிருந்தும் கொஞ்சம் கூட உற்சாகக் குறைவில்லாமல் கர்மவீரர்கள் போல் நாடகத்தை நடத்தினார்கள். சபையோர்கள் மட்டும் இந்த நாடக சபை கலைகிறதே யென்று ஏக்கத்துடன் ரசித்தார்கள்.

இந்த உன்னதக் கலைக்குப் பொதுஜன ஆதரவு குறைவென்று நினைப்பதற்கில்லை. மக்கள் தங்களுக்கு இன்றியமையாத உணவுப் பொருள்கள் யானை விலை, குதிரை விலையாக இருந்தும் கூட நாடகம், சினிமா, பொருட்காட்சி ஒன்றையும் விடாமல் பார்த்துத்தான் வருகிறார்கள். எல்லாவற்றிலும் கூட்டம் நிறைந்துதான் இருக்கிறது. ஆகையால் பொதுஜன ஆதரவு நாடகத்துக்கு இல்லையென்று சொல்ல முடியாது.

நாடக சபையைக் கலைக்க டி. கே. எஸ். சகோதரர்கள் அநேக காரணங்கள் சொல்லுகிறார்கள். அதில் முக்கியமானது சர்க்காரின் ஆதரவு குறைவு என்பதுதான். தற்சமயமிருக்கும் உணவுப் பஞ்சத்தில் நாடகக் கலையை வளர்ப்பது அவசியமில்லை என்றும் தவறு என்றுங்கூட வாதம் செய்யலாம். இந்த வாதம் சரியல்ல. ஒரு நாட்டின் பண்பாடுதான் அதற்கு மிகச் சிறந்த செல்வமென்று எந்தக்காலத்திலும் கருதப்பட்டிருக்கிறது. கலைகள் பண்பாட்டின் அளவுகோல். தகுந்த கலைப் பிரசாரமே மக்கள் மனதில் அவ்வப்பொழுது தேவசக்தியை ஓங்கச் செய்யும். அசுர சக்தியை மங்கச் செய்யும்.

நல்ல சங்கீதத்தைக் கேட்கும்பொழுது மனதில் ஒரு தூய்மை, பக்தி முதலிய புனித உணர்ச்சி தோன்றுகிறது. ஆனால் சங்கீதத்தை அநுபவிக்க ஓரளவு சங்கீத ஞானம் வேண்டும். அதைவிடப் பன்மடங்கு அதிகரித்த பலன்களை ஒரு சிறந்த நாடகம் மக்களுக்குக் கொடுக்கக்கூடும். மேடையில் ஏறி ஜனங்களுக்கு நல்ல மார்க்கத்தை உபதேசம் செய்ய ஆரம்பித்தால் விரல்விட்டு எண்ணக்கூடிய சபையோர்கள் முதல் நாள் இருப்பார்கள். மறுநாள் உபதேசம் செய்பவர் தனக்குத்தானே பேசிக்கொள்ள வேண்டியதுதான். ஆனால் நாடகம் சர்வஜன ரஞ்சகமானது. உன்னத லக்ஷியம், சமூக சீர்திருத்தம் முதலிய கருத்துக்களை ஒரு நாடகத்தின் சிறந்த காட்சி, சங்கீதம், வசனம், நடிப்பு இவைகளைக் கொண்டு மக்களிடையே பிரசாரம் செய்யலாம்.

அண்ணன் வரும்வரை அமாவாசை காத்திராது! நமக்கு சௌகரியமான ஒரு அழகான நாளில், நம் கஷ்டங்கள் மறைந்து சுபிட்சம் ஏற்பட்ட பிறகு, நாடகக் கலை உயிரோடு எழுந்து நம்மை வரவேற்காது. கலைகள் வருஷக் கணக்கில் பாடுபட்டு அன்புடன் வளர்த்த மரங்கள். வேரோடு வெட்டினால் மறுபடி துளிர்க்காது. நம் சர்க்கார் கலைகளைப் புறக்கணிக்காமல் வளர்ப்பது தேசத்துக்கும் மக்களுக்கும் செய்யும் சேவையாகும்.

# சரியான அபேட்சகர்

ரா. நா.

மத்திய சட்டசபைத் தேர்தல் நடப்பதற்கு முதல் நாள். சென்னை நகரின் சார்பாக நின்ற இரு அபேட்சகர்கள் காலஞ்சென்ற ஸ்ரீ சத்திய மூர்த்தியும் ஸர் ஏ. ராமஸ்வாமி முதலியாரும். இருவரும் புகழ் வாய்ந்த பிரசங்கிகள். அந்தக் காலத்தில் சென்னை நகரத்தில் ஜஸ்டிஸ் கட்சிக்கு நல்ல செல்வாக்கு உண்டு. ஸர் ராமஸ்வாமி முதலியார் ஜஸ்டிஸ் கட்சியின் தூண்களில் ஒன்று எனக் கருதப்பட்டவர்.

தேர்தலுக்கு முதல் நாள் இரவு பழைய காங்கிரஸ் மாளிகையில் மாபெரும் கூட்டம் நடந்தது. ஸ்ரீ சத்தியமூர்த்தி எழுந்து பேசினார். "நண்பர்களே! நாளைக்குத் தேர்தல் நடக்கப் போகிறது. உங்களுடைய அபரிமிதமான வாக்குகளைப் பெற்று நான் தான் ஜெயிக்கப் போகிறேன். இது வெறும் டம்பப் பேச்சல்ல. நான் ஒவ்வொரு ஓட்டரையும் நேரில் பார்த்திருக்கிறேன். அவர்களுடைய முக விலாஸத்திலிருந்து அவர்களில் பெரும்பான்மையோர் எனக்குத்தான் அதாவது காங்கிரஸுக்குத்தான், ஓட்டுச் செய்வார்கள் என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். எனது நண்பர் ஸ்ரீமான் ராமசுவாமி முதலியாரை இன்று சந்தித்தேன். அவர் கையைக் குலுக்கினேன். அவர் நாடி இறங்கி யிருக்கிறது" என்று சொன்னவுடன் மக்கள் கரகோஷம் செய்தனர்.

சத்தியமூர்த்தி கூறியபடியே வெற்றியும் பெற்றார். ஆனால் அவர் எத்தனை கூட்டங்களில் பேசினார்; எத்தனை ஆயிரம் பேர்களைப் பார்த்தார் என்பது அவருடன் வேலை செய்தவர்களுக்குத்தான் தெரியும்.

அன்று ஜஸ்டிஸ் கட்சி ஒன்றுதான் நம்மை எதிர்த்தது. இன்று பலவகை கோஷ்டிகள் நம்மை எதிர்க்கின்றன. இதுவரையில் காங்கிரஸ் அபேட்சகராக நியமனம் பெற வேண்டுமென்றால் ரொம்ப கஷ்டப்பட வேண்டியதில்லை. அபேட்சா பத்திரம் தாக்கல் செய்துவிட்டுப் பார்லிமெண்டரி போர்டு அங்கத்தினர்களைப் பார்த்து அவர்கள் ஆதரவைப் பெற்றால் போதும். பார்லிமெண்டரி போர்டு அங்கத்தினர்களும் தங்களுடைய சௌகரியத்திற்கேற்ப அபேட்சகர்களைப் பொறுக்கி வந்தார்கள். அதே முறையில் அபேட்சகர்களை இனியும் தேர்ந்தெடுப்பது நியாயமில்லை.

பார்லிமெண்டரி முறையில் தேர்ந்த சிறந்த அநுபவம் பெற்று இன்று பிரிட்டனில் ஆட்சி புரியும் தொழிற் கட்சி சுலபமாக வெற்றி பெற்றுவிடவில்லை. தொழிற் கட்சி அபேட்சகராக நியமனம் பெற என்னென்ன சோதனைக்குள்ளாக வேண்டியிருந்தது என்பதை ஒரு அபேட்சகர் விவரித்திருக்கிறார். அதன் சுருக்கம்:

"என் தொகுதியில் தொழிற் கட்சிக்கு ரயில்வே தொழிலாளர் டிரேட் யூனியன்கள் போன்ற பல கிளை ஸ்தாபனங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு ஸ்தாபனமும் ஒரு அபேட்சகரைத் தேர்ந்தெடுக்கும்படி தொகுதி கட்சி ஸ்தாபனம் கேட்டுக் கொண்டது. ஆறு ஸ்தாபனங்கள் ஆறு நபர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பின. நான் முதலில் ரயில்வே தொழிலாளர் ஸ்தாபனத்தின் அங்கீகாரத்தைப் பெற அந்த ஸ்தாபன காரியாலயத்திற்குச் சென்றேன். என்னைப்போல் அபேட்சகராக விரும்பிய இன்னும் சிலர் வந்திருந்தனர்.

சில நிமிஷங்களுக்கெல்லாம் என்னைப் பற்றி நான் சொல்லிக்கொள்ள விரும்புவதைக் கூறும்படி தலைவர் கேட்டார். பிறகு, நான் எப்பொழுது தொழிற் கட்சியில் சேர்ந்தேன், எதற்காக பார்லிமெண்ட் மெம்பராக விரும்புகிறேன், மெம்பராகத் தேர்ந்தெடுக்கப்பட்டால் என் கடமையைச் சரிவரச் செய்வதற்கு அவகாசம் இருக்குமா? என்ற கேள்விகளுக்குத் திருப்தியாகப் பதில் சொன்னவுடன், எல்லா அங்கத்தினர்களும் என்னை ஆதரித்தனர். ரெயில்வே தொழிலாளர் ஸ்தாபனத்தைப் பொறுத்த மட்டில் என்னை அபேட்சகராக ஏற்றுக் கொண்டனர்.

நாங்கள் ஆறுபேரும் கட்சி ஸ்தாபனத்தின் முன் ஆஜரானோம். ஆறு ஸ்தாபனங்களின் நிர்வாகஸ்தர்களும் கூடியிருந்தனர். மறுபடியும் நாங்கள் ஒவ்வொருவரும் எங்களைப் பற்றிப் பேசவேண்டி வந்தது. எல்லோர் பேச்சையும் கேட்டுவிட்டுக் கட்சி அதிகாரிகள் கட்சியின் பொது சபையின் முடிவுக்கு விட்டுவிட்டனர்.

# அதோ பிடியுங்கள்!



6
பர்தா அணிந்த ஹைதராபாத் போலீஸ்காரர்கள் ஒருவரை மற்றொருவர் சந்தேகித்து, ஒருவரை மற்றொருவர் கைது செய்து கொண்டார்கள்.


7
லெயிக் அலியின் சுயரூபமும் அவர் பர்தாவில் எப்படி இருப்பார் என்ற படமும் எங்கும் ஒட்டப் பட்டது.


8
அதன் பலனாக லெயிக் அலி என்று தவறாக ஒருவர் கைது செய்யப் பட்டார்.


9
போலிசுகளைக் கண்டு ஏமாறாதீர்கள்!
லெயிக் அலி
POLICE STATION
....இந்தச் செய்தியைக் கேட்ட லெயிக் அலி போலீஸ்களைக் கண்டு ஏமாறாதீர்கள் என்ற நோட்டீசை போலீஸ் ஸ்டேஷன் களில் ஒட்டிச் சென்றார்?



பெரிய தலைவர் ஒருவரைப் போல் லெயிக் அலி நடித்துத் தப்பித்துக் கொண்டார் என்று கேள்விப் பட்டு, புது டில்லியிலும் தேடுகிறார்கள். அதன் பலன் இப்படி முடிந்தது!
10



சினிமா நடக்கும் போது ஒரு கான்ஸ்டேபிள் வெள்ளித் திரையைச் சுட்டிக் காட்டி: "அதோ போகிறார், லெயிக் அலி! பிடியுங்கள், பிடியுங்கள்!" என்றார்.
11

# லெயிக் அலி மர்மம்!



ஹைதராபாத் மாஜி பிரதமர் லெயிக் அலி குடும்ப சமேதராக உள்பட பாதுகாப்பிலிருந்து தப்பித்து வெளியேறினார்.



லெயிக் அலி:—“பர்தாவில் உள்ள பெண்களைப் பரிசோதிப்பதற்குத்தான் உன்னை ஏற்படுத்தி யிருக்கிறதே தவிர, பர்தாவில் உள்ள ஆண்களைப் பரிசோதிக்க உனக்கு உரிமை கிடையாது! போ அப்பால்!”

ஹைதராபாத் போலீஸார் பூனைகளையெல்லாம் துரத்திச் சென்று பார்த்தும் துப்பு ஒன்றும் துலங்காமற் போகவே..





அமெரிக்காவுக்கு ஏற்றுமதியான யானையையும் நிறுத்திச் சோதனை போட்டுப் பார்த்தார்கள்!



“நாம் எங்கே போகிறது என்பது பற்றி நாம் ஏன் கவலைப்பட வேண்டும்? நாம் எங்கே போயிருப்போம் என்று பத்திரிகையில் போடுவார்கள். அதைப் பார்த்துக் கொண்டு அங்கே போகலாம்” என்றார் லெயிக் அலி.





யிருக்க, அவருடைய வாழ்க்கையிலேயே ஒரு பெரிய நஷ்டம் சம்பவிக்கும்போலிருக்கிறது. உங்களுடைய கடிதங்களில் உள்ள விஷயங்களை அறிந்த ஸ்ரீமான் சிவராமனின் தாய்மாமன் தன்னுடைய பெண்ணை ஸ்ரீமான் சிவராமனுக்குக் கலியாணம் செய்து கொடுப்பதாகப் பெரியோர்கள் முன்னிலையில் வைத்து நிச்சயித்திருந்ததை ரத்து செய்து விட்டார். இதனால் என்னுடைய கட்சிக்காரருக்கு ஏற்பட்டிருக்கும் அவமானமும் பொருளாதார நஷ்டமும் அளவிடக்கூடியது அல்ல. வேறு யாரோ ஒருவருக்கு அனுப்பி வைக்க வேண்டிய நோட்டீஸ்களை என்னுடைய கட்சிக்காரருக்கு நீங்கள் தவறுதலாக அனுப்பியதன் பலன்தான் இவ்வளவும்.

ஆகையால், நீங்கள் உங்கள் அஜாக்கிரதையினால் இழைத்த தவறுக்கு இந்தக் கடிதம் கண்ட ஒரு வாரத்திற்குள் மன்னிப்புக் கோர வேண்டும். இல்லாவிடில் உம் மீது மான நஷ்ட தாவா தொடரப்படும் என்பதை அறிவீராகவும்.

(ஒப்பம்) விடாக்கண்ட ராவ்
அட்வகேட்

## 5

அலங்கோலபுரம் முனிசிபாலிடி
சுகாதார இலாகா
1—2—50

ஸ்ரீ விடாக்கண்ட ராவ் அவர்களுக்கு,

28-1-50-ல் நீங்கள் அனுப்பிய நோட்டீஸைப் பெற்றுக் கொண்டோம். அதற்குக் கீழ்க்கண்ட பதிலை அளிக்கிறோம்:—

முதலாவதாக, சம்பந்தப்பட்ட குழந்தை பிறந்தபோது உங்கள் கட்சிக்காரருக்கு முறைப்படி கலியாணம் ஆகியிருந்ததா, இல்லையா என்ற சர்ச்சையில் இறங்க இந்த ஆபீஸுக்கு அவசியமில்லை என்று கருதுகிறோம்.

இரண்டாவதாக இந்த ஆபீஸில் உள்ள ரிகார்டுகளிலிருந்து அறிந்த தகவல்களை அடிப்படையாக வைத்துக் கொண்டுதான் உங்கள் கட்சிக்காரருக்கு நோட்டீஸ்கள் அனுப்பப் பட்டன. ஆபீஸில் உள்ள ரிகார்டுகளில் கண்ட விஷயங்கள் சரியானவை அல்ல என்று எண்ணுவதற்கு ஒரு முகாந்திரமும் இல்லை என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

மூன்றாவதாக, இந்த ஆபீஸிலிருந்து 25-1-50ல் அனுப்பிய கடிதம் மூலமாய் அதற்கு முன் அனுப்பிய இரண்டு கடிதங்களையும் ரத்து செய்து விட்டபடியால் நீங்கள் எங்கள்மேல் ஒருவித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளக் காரணமில்லை. அதையும்மீறி நடவடிக்கை எடுக்கும் பட்சத்தில் அதன் பலாபலன்களை உங்கள் கட்சிக்காரர் அனுபவிக்க வேண்டியதாயிருக்கும் என்பதை இதன் மூலம் நாங்கள் உறுதியாகத் தெரிவித்துக் கொள்கிறோம். உங்களுக்கு எது உசிதமென்று தோன்றுகிறதோ அப்படிச் செய்து கொள்ளவும்.

(ஒப்பம்) டாக்டர் அசமஞ்சம்
சுகாதார அதிகாரி

## 6

அலங்கோலபுரம்
3—2—50

டாக்டர் அசமஞ்சத்திற்கு
அட்வகேட் விடாக்கண்ட ராவ் எழுதியது:

உங்களுடைய 1-2-50 தேதியிட்ட கடிதம் கிடைக்கப் பெற்றேன்.

உங்கள் கடிதத்தில் கண்ட முதல் பாராவை நான் முழுவதும் ஒப்புக் கொள்ளுகிறேன். ஆனாலும் சம்பந்தப் பட்ட நோட்டீஸ்களை நீங்கள் என்னுடைய கட்சிக்காரருக்கு அனுப்பியிருக்கக் கூடாது என்று காலக்கிரமத்தில் ருஜுவாகும் பட்சத்தில், நீங்கள் கொடுத்திருக்கும் பதிலில் தொக்கி நிற்கும் விஷமத்தனமான பொருளுக்கு நீங்கள் வருங்காலத்தில் கோர்ட்டார் முன் சமாதானம் சொல்ல வேண்டியதுடன் நஷ்ட ஈடு கொடுக்கவும் தயாராக இருக்க வேண்டுமென்பதை உங்கள் ஞாபகத்திற்குக் கொண்டு வருகிறேன். நிற்க.

நீங்கள் 25-1-50ல் எழுதிய கடிதம் வந்து சேரு முன்பே என்னுடைய கட்சிக்காரருக்கு நீங்கள் அனுப்பியிருந்த கடிதங்கள் மிகுந்த கஷ்டத்தையும் அவமானத்தையும் கொடுத்து விட்டன என்பதை நினைவுறுத்துகிறேன்.

ஆகையால் நீங்கள் மறுமுறையும் உங்கள் ஆபீஸ் ரிஜிஸ்டர்களைப் பார்வையிட்டு அதில் கண்ட ஸ்ரீமான் சிவராமனும் என்னுடைய கட்சிக்காரரும் ஒன்றுதானா என்பதை ஊர்ஜிதம் செய்யவும். அப்படி நீங்கள் செய்யாவிடில் உங்கள்மீது தாவா தொடரவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுவிடுமென்று தெரிவித்துக் கொள்கிறேன்.

(ஒப்பம்) விடாக்கண்ட ராவ்.

## 7

அலங்கோலபுரம் முனிசிபல் ஆபீஸ்
8—2—50

அட்வகேட் விடாக்கண்ட ராவுக்கு,

உங்களுடைய சமீபகாலத்திய கடிதத்தில் கண்டபடி மறுபடியும் எங்கள் ஆபீஸ் ரிஜிஸ்டரைப் பரிசீலனை செய்து பார்த்ததில் உங்கள் கட்சிக்காரருக்கு மூன்று மாதத்துக்கு முன் ஒரு பெண் குழந்தை பிறந்த தகவலே அவரே இந்த ஆபீஸுக்கு வந்து பதிவு செய்திருப்பதாகக் காணப்படுகிறது.

இந்த ஆபீஸ் சம்பந்தப்பட்டவரை மேற்படி குழந்தை ஏற்கெனவே காலகதி அடைந்துவிட்டபடியால் இந்தக் கேஸையும் இத்துடன் காலாவதியானதாகக் கருதியுள்ளோம். இருந்தாலும் உங்கள் கட்சிக்காரர் உங்கள் மூலமாய் அனாவசியமாக எங்களுக்கு அனுப்பிவைத்த நோட்டீஸுக்கு எதிர் நடவடிக்கை எடுக்க எங்கள் மேலதிகாரிகளைக் கலந்தாலோசித்துக்கொண்டிருக்கிறோம் என்பதை இங்கே குறிப்பிடாமலிருக்க முடியவில்லை.

(ஒப்பம்) டாக்டர் அசமஞ்சம்
சுகாதார அதிகாரி

## 8

அலங்கோலபுரம்
12—2—50

டாக்டர் அசமஞ்சத்திற்கு,

உங்களுடைய 8—2—50 கடிதம் என்னுடைய கட்சிக்காரரைத் திடுக்கிட வைத்தது. தப்பு முற்றிலும் உங்கள்மீது தான் என்பதற்குத் தக்க ருஜுக்கள் கிடைத்திருக்கின்றன. என்னுடைய கட்சிக்காரர் சிரமப்பட்டுச் சேகரித்து வைத்திருக்கும் சில தகவல்களைக் கீழே கொடுத்திருக்கிறேன். இதன் பிறகாவது உங்களுடைய தவறை உணர்ந்து உடனடியாக நீங்கள் மன்னிப்புக் கோர வேண்டும். தவறினால் தாமதமன்னியில் நடவடிக்கை எடுக்கப்படுமென்பதை அறிவீராகவும். இவ்வூர் இஸ்டசித்தி இசக்கி அம்மன் தெரு, 4-B இலக்கமிட்ட (48 அல்ல) வீட்டில் ஆறு மாதத்திற்கு முன்பு சி. வ. ராமன் (சிவராமன் அல்ல) என்று ஒருவர் குடியிருந்தாராம். அவருக்கு ஒரு பெண் குழந்தை பிறந்து கொஞ்ச நாள் கழித்து இறந்து விட்டதாகத் தெரியவருகிறது.



விஷயம் இப்படியிருக்க, நீங்கள் 48-ம் இலக்கமிட்ட வீட்டில் உள்ள என்னுடைய கட்சிக்காரர் சிவராமனுக்கு அசம்பாவிதமான நோட்டீஸ்கள் அனுப்பியது முதல் பிசகு. இதை விளக்கி நாங்கள் பலமுறை எடுத்துக் காட்டிய பிறகும் நீங்கள் பிடிவாதமாக முதலில் எழுதியதையே ஸ்தாபிதம் செய்ய முயற்சி செய்தது மிகவும் பொறுப்பற்ற செய்கை என்பதில் கொஞ்சங்கூட சந்தேகமில்லை.

ஆகையால் இது கடிதம் கண்ட ஒரு வாரத்திற்குள் உங்களுடைய மன்னிப்பை என் கட்சிக்காரருக்குத் தெரிவிக்கவும். தவறும் பட்சத்தில் கோர்ட் மூலமாய் நடவடிக்கை எடுக்கப்படும். இதையே இறுதி எச்சரிக்கையாகப் பாவிக்கும்படி உங்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

(ஒப்பம்) விடாக்கண்ட ராவ்

## 9

அலங்கோலபுரம் முனிசிபல் ஆபீஸ்
19—2—50

அட்வகேட் விடாக்கண்டராவ் அவர்களுக்கு:—

உங்களுடைய கட்சிக்காரர் ஸ்ரீமான் சிவராமன் அவர்கள் சம்பந்தமாய் நீங்கள் சுகாதார அதிகாரிக்கு எழுதிய கடிதங்கள் என்னுடைய பார்வைக்குக் கொண்டு வரப்பட்டன. உங்கள் கடைசிக் கடிதத்தில் கண்ட விவரங்களை விசாரித்துப் பார்த்ததில் உண்மை புலப்பட்டது. தவறு எங்கள்மீதுதான் இருக்கிறது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். உங்களுடைய கட்சிக்காரருக்கு அனாவசியமாக ஏற்பட்ட மனக் கஷ்டத்திற்காக முனிசிபாலிட்டியின் சார்பாக நான் மன்னிப்புக் கோருகிறேன். இதில் சம்பந்தப்பட்ட சிப்பந்திகளான குமாஸ்தாவும் சுகாதார அதிகாரியும் முன்னெச்சரிக்கையுடன் அம்மை குத்திக் கொள்ளாததால் வைசூரி கண்டு இப்போது ஆஸ்பத்திரியில் இருக்கிறார்கள். ஆகையால் அவர்கள்மீது உடனே உத்யோக பூர்வமாக நடவடிக்கை எடுத்துக் கொள்ள முடியாமைக்கு வருந்துகிறேன்.

நடந்து போன அசந்தர்ப்பத்திற்காக மறுமுறையும் என்னுடைய வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

(ஒப்பம்) சுபோத்சுஜன்
கமிஷனர்,
அலங்கோலபுரம்
முனிசிபாலிடி.

# ஒன்பது கடிதங்கள்



வசு

## 1

அலங்கோலபுரம் முனிசிபல் ஆபீஸ்,
10—1—50

48, இஷ்டசித்தி இரக்ஷி அம்மன் தெரு,
அலங்கோலபுரம்.

ஸ்ரீ சிவராமன் அவர்களுக்கு,

நகரில் நாளுக்கு நாள் வைசூரி நோய் வேகமாய்ப் பரவி வருவதாலும், உம்முடைய பெண் குழந்தை பிறந்து சென்ற வாரத்தோடு மூன்றுமாதம் ஆகி விட்டபடியாலும், இந்தக் கடிதம் கண்ட ஒரு வாரத்திற்குள் குழந்தையுடன் முனிசிபல் ஆபீஸுக்கு வந்து குழந்தைக்கு அம்மை குத்திக் கொண்டு போவீராகவும்.

(ஒப்பம்) டாக்டர் அசமஞ்சம்,
சுகாதார அதிகாரி.

## 2

அலங்கோலபுரம் முனிசிபல் ஆபீஸ்
20—1—50

ஸ்ரீ சிவராமன் அவர்களுக்கு,

10—1—50 தேதியிட்ட இந்த ஆபீஸ் கடிதத்தில் கண்டபடி நீர் நாளது வரை உம்முடைய குழந்தையை முனிசிபல் ஆபீசுக்குக் கொண்டு வந்து அம்மை குத்திக் கொள்ளாமலிருந்ததற்காக உம் மீது பொதுஜன சுகாதார சட்டப்படி நடவடிக்கை எடுக்க நேரிடும்.

இந்த எச்சரிக்கை கண்ட மூன்று தினங்களுக்குள் குழந்தையை முனிசிபல் ஆபீஸில் ஆஜர் செய்து அம்மை குத்திக் கொண்டு போகவோ, அல்லது அவ்விதம் செய்ய முடியாததற்குக் காரணத்தை எழுத்து மூலமாகத் தெரிவிக்கவோ மறுபடியும் உமக்கு ஒரு சந்தர்ப்பம் கொடுத்துள்ளோம். இதை உம்முடைய நலனை உத்தேசித்துப் பயன்படுத்திக் கொள்வீராகவும்.

(ஒப்பம்)
டாக்டர் அசமஞ்சம்



## 3

அலங்கோலபுரம் முனிசிபல் ஆபீஸ்
25—1—50

ஸ்ரீ சிவராமன் அவர்களுக்கு,

இந்த ஆபீஸ் மரணப் பதிவு ரிஜிஸ்டர் படி, உமக்குப் பிறந்த குழந்தை பிறந்த பதினைந்தாவது தினத்தன்றே இறந்து போய் விட்டதாகத் தெரியவருகிறது. இந்தத் தகவலை நீங்களே தெரிவித்திருந்தால் இந்த ஆபீஸிலிருந்து அனுப்பிய 20—1—50-ம் தேதி இறுதி எச்சரிக்கைக்கு அவசியமில்லாமல் போயிருக்கும்.

ஆகையால் இந்த ஆபீஸிலிருந்து 10—1—50, 20—1—50 தேதிகளில் உமக்கு அனுப்பப் பட்ட கடிதங்களை ரத்து ஆனதாகப் பாவிப்பீராகவும்.

(ஒப்பம்) டாக்டர் அசமஞ்சம்

## 4

ஸ்ரீ விடாக்கண்டராவ்,
எம். ஏ. பி. எல்.
அட்வகேட்

அலங்கோலபுரம்
28—1—50

அலங்கோலபுரம் முனிசிபாலிடி சுகாதார அதிகாரி டாக்டர் அசமஞ்சத்திற்கு எழுதிக் கொண்டது என்னவென்றால்:—

உங்கள் ஆபீஸிலிருந்து முறையே 10—1—50, 20—1—50, 25—1—50 தேதிகளில் தனக்குக் கிடைத்த கடிதங்களை என்னுடைய கட்சிக்காரர் மிஸ்டர் சிவராமன் என்னிடம் கொடுத்துத் தங்களுக்கு மேற்கண்ட பிரகாரம் நோட்டீஸ் கொடுக்கச் சொல்லியிருக்கிறார்:—

என்னுடைய கட்சிக்காரர் ஸ்ரீமான் சிவராமனுக்கு நாளது வரை கல்யாணமாகவே இல்லை. நிலைமை அப்படியிருக்கும் பொழுது, அவருக்குக் குழந்தை பிறந்து இறந்து போனதாகத் தங்களிடமிருந்து கிடைத்த கடிதங்களில் குறிப்பிடப்பட்டிருப்பதனால் அவருக்கு ஏற்பட்ட மனக் கஷ்டம் ஒருபுற

இருந்தாலும் தாவிக் குதித்துக் கொண்டு சென்று வெளுத்த ஆடைகளை மேலே கொண்டு போய் வைக்கவேண்டும். இப்படி எவ்வளவோ ஓய்வு ஒழிவு இல்லாத வேலைகள். சிறுவனும், சிறுமியும் அலுத்துப் போனார்கள். ஒரு நாள் கழிவது கூட ஒரு யுகம் போல இருந்தது அவர்களுக்கு.

ஒருநாள் பாபு தடதட வென்று மருந்துப் புட்டியை எடுத்துக் கொண்டு படி ஏறிப் போனபோது தடுக்கி விழுந்து விட்டான். முழங்காலில் அடிபட்டு இரத்தம்கூட வந்துவிட்டது. அது மட்டுமா? "மருந்து புட்டியை ஏன் உடைத்தாய்?" என்று வக்கீல் அவன் காதைத் திருகி விட்டார். எல்லாம் சேர்ந்து பாபுவுக்கு அழுகை பொங்கிக் கொண்டு வந்தது.

பிரமீளா வந்து "அழாதே, பாபு!" என்று சொல்லி அவனைச் சமாதானப்படுத்தினாள்.

பாபு சற்று நேரம் யோசனையில் மூழ்கி யிருந்தான். பிறகு அவன் சட்டென்று "பிரமீளா, நான் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன்" என்றான். (தொடரும்)

---

கோபாலனுடைய கடியாரம் நின்று விட்டது. அவன் தன் நண்பர்களை நோக்கி, "இப்போது மணி என்ன?" என்று கேட்டான். கோவிந்தன், "9 அடித்து 18 நிமிஷம்" என்றான். ராமு, "9 அடித்து 21 நிமிஷம் ஆகிறது" என்றான். சுந்தரம், "9 அடித்து 15 நிமிஷம் ஆகிறது" என்றான். மூவர் சொன்னதும் தப்பு. ஆனால் கோவிந்தன் தப்புக்கும் சுந்தரத்தின் தப்புக்கும் அரை மடங்கு வித்தியாசம். ராமுவின் தப்புக்கும் கோவிந்தன் தப்புக்கும் கால் மடங்கு வித்தியாசம். அப்படியானால் சரியான மணி என்ன?

சென்ற வாரப் புதிருக்கு விடை:
80 பொட்டு வேட்டு; 19 ஏரோப்ளேன் வெடி; 1 குதிரை வெடி.

---

# இரவல் புத்தகம்

"டேய்! இன்னும் புத்தகத்தை மூடி வைக்கவில்லையா?!" என்று ஐந்தாம் தடவையாகக் கோபித்துக் கொண்டார் தந்தை.

இனியும் புத்தகத்தை மூடி வைக்காமல் இருந்தால் தந்தையின் கடுங்கோபத்துக்கு ஆளாக நேரும் என்பதை உணர்ந்த பையன் பக்கத்திலிருந்த ஜன்னலில் அதை மூடி வைத்துவிட்டுப் படுத்துத் தூங்கலானான்.

மறுநாள் காலை எழுந்து பார்த்தால் புத்தகம் முதல் நாளிரவு பெய்த மழையில் சொட்டச் சொட்ட நனைந்து கிடந்தது. அதுவோ இரவல் புத்தகம்! அதைக் கண்டதும் பையன் துணுக்குற்றான். இருந்தாலும் அவன் தைரியமாகப் புத்தகம் இரவல் கொடுத்தவரிடம் சென்று, "ஸார்! என் அஜாக்கிரதையினால் புத்தகம் நனைந்து வீணாகி விட்டது.. என்னை மன்னிக்க வேணும்" என்றான்.



அந்தப் பிரமுகருக்கு ரௌத்ராகாரமாகக் கோபம் பொங்கி வந்தது. அவர், "புத்தகத்தின் விலை தீரும்வரை நீ என் வயலில் வேலை செய்ய வேண்டும்" என்றார்.

பையன் அவருடைய வயலில் மிகவும் உற்சாகமாக மூன்று நாட்கள் வேலை செய்தான். நான்காம் நாள் 'ஜனாதிபதி வாஷிங்டனின் சரிதம்' என்னும் அந்தப் புத்தகம் அவனுக்குச் சொந்தமாகி விட்டது. அவன் புத்தகமும் கையுமாக மகிழ்ச்சி பொங்க வீட்டுக்கு வந்து தன் பெற்றோர்களிடம் விவரம் முழுதும் கூறினான். "நானும் ஒருநாள் கட்டாயம் ஜார்ஜ் வாஷிங்டன் மாதிரி ஜனாதிபதியாக வருவேன்!" என்றும் மார் தட்டிச் சொன்னான்.

அவன் அப்படிச் சொன்னதோடு மட்டுமல்ல; தான் சொன்னது போலவே ஒரு நாள் அமெரிக்க ஜனாதிபதியாகவும் ஆகிவிட்டான். அவன் யார் தெரியுமா? அவன்தான் சரித்திரப் புகழ் பெற்ற அமெரிக்க ஜனாதிபதி அப்ரஹாம் லிங்கன். —வீஞ்ஞ

பாபுவும் பிரமீளாவும் நடுநடுங்கிப் போனார்கள். கிழவர் சிறுவனையும், சிறுமியையும் உற்றுப் பார்த்தார். மூக்குக் கண்ணாடியைச் சரிப்படுத்திக் கொண்டு இன்னொரு தரம் கூர்ந்து பார்த்தார். "பசங்களா! இது இரண்டாம் வகுப்பு வண்டி, தெரியுமா? டிக்கட் வாங்கி யிருக்கிறீர்களா?" என்று அதட்டிக் கேட்டார்.

பாபு திகைத்தான். பிரமீளாவும் திருட்டு விழி விழித்தாள்.

ரொம்ப ரொம்பக் கஷ்டப்பட்டு தைரியத்தை வரவழைத்துக் கொண்டு, "நாங்கள் அனாதைகள்" என்று இருவரும் சொன்னார்கள்.

பாபுவின் களையான முகத்தைப் பார்த்தார் கிழவர். பிரமீளாவின் குறுகுறுப்பான பார்வை அவரைக் கவர்ந்து விட்டது.

"என்னுடன் வருகிறீர்களா? நான் கோயம்புத்தூருக்குப் போகிறேன். எங்கள் வீட்டில் வந்து நான் சொன்ன வேலைகளைச் செய்ய வேண்டும்" என்றார் அந்தக் கிழவர்.

அவர் ஒரு பிரபல வக்கீல். கோயம்புத்தூரில் அவருக்குப் பெரிய பங்களா இருந்தது. குழந்தை குட்டிகள் ஒன்றும் இல்லாதவர். சென்னைக்கு ஏதோ ஒரு வழக்கு விஷயமாக வந்து விட்டுத் திரும்பிப் போய்க் கொண்டிருந்தார். பாபு, பிரமீளா இருவரையும் பார்த்தவுடன் அவருக்கு "பாவம், சிறு பிள்ளைகளாக இருக்கிறார்கள். போனால் போகட்டும்; அழைத்துக் கொண்டு போய் வீட்டில் வைத்துக் கொள்ளுவோம்" என்ற இரக்கம் பிறந்தது.

பாபுவும் பிரமீளாவும் அதற்கு ஒப்புக் கொண்டார்கள்.

மறுநாள் காலை அவர்கள் கோயம்புத்தூரை அடைந்தார்கள். கிழவரை அழைத்துப் போவதற்காக ஸ்டேஷனுக்குக் கார் வந்திருந்தது. பிரமீளாவும் பாபுவும் அதில் ஏறிக்கொண்டு போய் ஒரு பெரிய பங்களா முன்பு இறங்கினார்கள்.

## 8. ஆளுக்கொரு குட்டு!

ஒரு முறை மணி அடித்தால் பாபு ஓடிவந்து பயபக்தியுடன் நிற்க வேண்டும். இரண்டு முறை மணி அடித்தால் பிரமீளா ஓடிவந்து, 'ஏன்?' என்று கேட்க வேண்டும். வரத் தவறினால் ஆளுக்கொரு குட்டு கிடைக்கும்— இப்படிச் சொல்லி யிருந்தார் கிழவர்.

ஒரு வாரத்துக்குள் ஐந்து ஆறு குட்டுக் கிடைத்தது பாபுவுக்கு. கிழவர் மிக்க கோபக்காரர் என்பது அப்போதுதான் இருவருக்கும் தெரிந்தது. பிரமீளா பெருமூச்சு விட்டுக் கொண்டே, "பாபு, எங்கே வந்தாலும் கஷ்டம் கூடவே வருகிறது. இதற்கு என்ன செய்வது?" என்று சொல்லி விட்டுப் பெருமூச்சு விட்டாள்.



கிழவரின் மனைவிக்கு உடம்பு சரியாக இல்லை. மேல் மாடியில் படுத்த படுக்கையில் இருந்தாள். நடமாடுவதே கிடையாது. எப்போதும் இருமிக் கொண்டிருப்பாள். அவளுக்குச் சிசுருஷை செய்யவே வக்கீல் பாபுவையும், பிரமீளாவையும் அழைத்துக் கொண்டு வந்தார். ஒரு மணி அடிப்பார் வக்கீல். பாபு விழுந்தடித்துக்கொண்டு மருந்துப் புட்டியை எடுத்துக்கொண்டு மாடிக்கு ஓட வேண்டும். இரண்டு மணி அடித்தால் பிரமீளா எங்

விட்டார். எனக்குக் குடை டான்ஸ், பலூன் டான்ஸ் எல்லாம் கற்றுக் கொடுத்திருக்கிறார். நான் புலிமீது கூடப் பயம் இல்லாமல் ஏறி உட்காரு வேன்!'' என்று சொன்னான்.

இருவரும் பேசிக்கொண்டே நடந்தார்கள். பாபு சொன்னான்: "எனக்கு இங்கே இருக்கப் பிடிக்கவில்லை. சொல்லிக் கொள்ளாமல் எங்கேயாவது ஓடிப் போய் விடலாமா என்று நினைக்கிறேன். நீ என்ன சொல்லுகிறாய்?''

"எனக்கும்தான் பிடிக்கவில்லை. கம்பி மேலே ஏறி நடக்கிறபோதெல்லாம் பயமாக இருக்கிறது. அன்று ஒரு நாள் எங்கேயோ பார்த்துக் கொண்டு கம்பியிலிருந்து தவறி விட்டேன். நல்ல வேளையாகக் கீழே இருந்தவர்கள் என்னை ஏந்திப் பிடித்துக் கொண்டு விட்டார்கள். அன்று சர்க்கஸ் முடிந்த பிறகு முதலாளி என்னைப் பார்த்து முழித்த முழி இப்போது நினைத்தாலும் பயமாக இருக்கிறது! நான் அனாதை. எங்கே போவது என்று எனக்கும் தெரியவில்லை, பாபு!'' என்று பிரமீளா சொல்லி விட்டுக் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

"அழாதே, பிரமீளா! நீ அழுதால் எனக்கும் அழுகை வருகிறது'' என்று கூறிவிட்டு அவளுடைய கண்களைத் துடைத்தான் பாபு.

பிறகு இரண்டு பேரும் சேர்ந்து யோசித்தார்கள். ஒருவருக்கும் தெரியாமல் ஓடிப் போய் விடுவது என்று தீர்மானித்தார்கள்.

மூலையில் ஒரு சைக்கிள் சாத்தியிருந்தது. சட்டென்று அதை எடுத்து அதன்மீது ஏறினான் பாபு. பின்னால் பிரமீளா ஏறிக் கொண்டு, "ரைட்!'' என்றாள். பாபு 'விர்'ரென்று கிளம்பினான். எங்கே போவது என்பது தெரியாமல் சைக்கிள் போன போக்கில் அதை விட்டுக் கொண்டே வேகமாகச் சென்றான். பின்னால் யாராவது துரத்திவருகிறார்களா என்று பிரண்டு பிரண்டு பார்த்துக் கொண்டே சென்றாள் பிரமீளா. திடீரென்று சைக்கிளை நிறுத்திக் கீழே இறங்கினான் பாபு. "ஏன்?'' என்று கேட்டாள் பிரமீளா. கொஞ்ச தூரத்துக்கு அப்பால் ஒரு ரயில் நின்று கொண்டிருந்தது. கைகாட்டி இறக்குவதற்காக அது அங்கே காத்துக் கொண்டிருந்தது. பாபு அதைச் சுட்டிக் காட்டி விட்டு, பிரமீளா, "வா! நாம் போய் அதில் ஏறிக் கொள்வோம்'' என்றான். அவளும் அதற்கு ஒப்புக் கொண்டாள். சைக்கிளை அங்கே ஒரு மூலையில் நிறுத்தி விட்டு இருவரும் ஓடிப் போய் ரயிலில் ஏறிக் கொண்டார்கள். இரண்டு பேருக்கும் மேல்மூச்சு கீழ் மூச்சு வாங்கிற்று.

அது ஒரு இரண்டாம் வகுப்பு வண்டி. யாரோ ஒரு கிழவர் காலை நீட்டிய வண்ணம் பத்திரிகை படித்துக் கொண்டிருந்தார். தலையில் வேண்டிய வழுக்கை விழுந்திருந்தது. மூக்குக் கண்ணாடி மாட்டி யிருந்தார்.

பாபுவும் பிரமீளாவும் அவசர அவசரமாகக் கதவைத் திறந்து அந்த வண்டிக்குள் நுழைந்தார்கள். உள்ளே உட்கார்ந்திருந்தவரைப் பார்த்ததும் பயந்து ஒரு மூலையில் ஒண்டிக் கொண்டார்கள்.

அந்தக் கிழவருக்கு கதவு திறக்கப் படும் ஓசை எப்படியோ கேட்டு விட்டது. கையிலிருந்த பத்திரிகையை வீசி எறிந்து விட்டு மூக்குக் கண்ணாடியை நெற்றிக்கு மேலே தூக்கி விட்டபடி கதவுப் பக்கம் எட்டிப் பார்த்தார்.






அவள் ஒரு சிறுமி. அவளை பாபு ஏற்கெனவே பார்த்திருக்கிறான். அந்தப் பைஜாமாவும், இரட்டைப் பின்னலும் நன்றாக அவனுக்கு நினைவு இருக்கிறது. கம்பிமீது குடை பிடித்துக் கொண்டு கொஞ்சம்கூடப் பயமின்றி நடந்து சென்று 'சபாஷ்' வாங்கும் வீரச் சிறுமி அவள் என்று அவனுக்கு நன்றாகத் தெரியும். ஆனால் அவள் "பாபு!" என்று கூப்பிட்டு நல்ல தமிழில் பேசியது அவனுக்கு ரொம்ப வியப்பாக இருந்தது.

"என் பெயர் பிரமீளா. நீதானே 'குட் ஈவினிங்' போடும் பாபு?" என்று சிரித்துக் கொண்டே கேட்டுவிட்டு, "குட்மார்னிங், பாபு!" என்று அவள் அவனுக்கு வந்தனம் செலுத்தினாள். பிறகு அருகில் வந்து மண்டியிட்டு உட்கார்ந்து கொண்டே மறுபடியும் கேட்டாள்: "பாபு, உன்னைத் தான்! ஏன் பேசமாட்டேன் என்கிறாய்? உன் பெயர் எனக்குப் பிடிக்கிறது. அதனால்தான் உன்னைக் கூப்பிட்டேன்!" என்று கூறிவிட்டுச் சிரித்தாள் அவள்.

"உன்னை எனக்குப் பிடிக்கிறது; ஆனால் உன் பேர்தான் எனக்குப் பிடிக்கவில்லை" என்று சொல்லிவிட்டுப் பாபுவும் சிரித்தான்.

"எனக்கு 'மீனு' என்றும் ஒரு பேர் உண்டு. இந்தச் சர்க்கஸிலே சேர்ந்த பிறகுதான் 'பிரமீளா' ஆனேன். என் ஊர் எது தெரியுமா? காஞ்சிபுரம்!" என்றாள் அவள்.



அதைக் கேட்டு பாபு ஆச்சரியம் அடைந்தான்.

இருவரும் எழுந்து மெதுவாக நடந்தார்கள். பிரமீளா சொன்னாள்: "எனக்கு அப்பா, அம்மா கிடையாது. அவர்களெல்லாம் சின்ன வயசிலேயே செத்துப் போய் விட்டார்களாம். காஞ்சிபுரத்தில் என் அப்பாவிற்குத் தெரிந்தவர் ஒருவர் என்னை வளர்த்தார். இந்தக் கம்பெனி எங்கள் ஊருக்கு வந்தபோது, நான் அனாதை என்று தெரிந்து இதன் முதலாளி என்மீது இரக்கப்பட்டு என்னை அழைத்துக் கொண்டு வந்து



இல்லை. குமாரகிரியின் விஷயம்தான் இப்படியென்றால் சித்திரலேகாவின் விஷயம் என்ன? அவள் குமாரகிரியின் குடிசையை நாடி எதற்காக வந்தாள்? யோகி குமாரகிரியைக் காதலிப்பதற்காகத் தானே? ஆனால் அவனுடைய குடிசையில் நுழைந்த பின் அவளுடைய அந்த நோக்கம் அடியோடு மாறிவிட்டது. அவள் சாதனையிலும் தவத்திலும் ஈடுபட விரும்பினாள்; அதைக் கற்றுத் தேற விரும்பினாள். ஆகவே குமாரகிரிக்குக் குந்தகமாக நிற்க விரும்பவில்லை. அவனுக்கு எத்தவிதமான இடையூறும் இழைக்க விரும்பவில்லை.

அன்று விளக்கேற்றி இரவு இரண்டு ஜாமம் கூடக் கழிந்து விட்டது. குமாரகிரி தியானத்தில் ஈடுபட வேண்டிய நேரமும் நெருங்கி விட்டது. அவன் தன் ஆசனத்தில் அமர்ந்து தன் இரு கண்களையும் மூடிக் கொண்டான். ஆனால் எவ்வளவோ முயன்றும் அன்று அவனால் தியானத்தில் ஆழ முடியவில்லை. இரு கண்களையும் மூடியபடி தியானத்தில் லயிப்பதற்கான ஏற்பாடு செய்து கொண்டிருந்தான். சித்திரலேகா மெதுவாகக் குடிசைக்குள்ளே எட்டிப் பார்த்தாள். குமாரகிரி கண்களை மூடிக் கொண்டிருக்கவே, அவன் தியானத்தில் லயித்து விட்டதாக அவளுக்குத் தோன்றியது. ஆகவே அவள் குடிசைக்குள் பிரவேசித்துத் தன் ஆசனத்தில் போய் அமர்ந்தாள்.

சித்திரலேகாவின் காலடி ஓசை கேட்டதும் குமாரகிரி கண் விழித்துக் கொண்டு விட்டான். பிறகு சித்திரலேகாவின் பக்கம் திரும்பி மிகவும் மெதுவாக அன்பு தோய்ந்த குரலில் "தேவி! சித்திரலேகா!" என்று அழைத்தான்.

அதைக் கேட்டதும் சித்திரலேகா திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். குமாரகிரி தியானத்தில் ஆழ்ந்துவிட்டானென்று அல்லவா அவள் தவறுதலாக எண்ணிவிட்டாள்! உடனே அவள் சட்டுப் புட்டென்று அவசர அவசரமாக எழுந்து நின்று, "மன்னிக்க வேண்டும், குருதேவா! தெரியாமல் தவறு இழைத்து விட்டேன். தாங்கள் தியானத்தில் லயிப்பதற்கு முன்பாக நான் குடிசைக்குள் நுழைந்தது மாபெரும் பிழைதான். தங்களுக்கு இடையூறு எதும் ஏற்படாத வகையில் நான் நடந்து கொண்டிருக்க வேண்டும். நான் வெளியே போய் தாங்கள் தியானத்தில் ஆழ்ந்த பின் திரும்பி வருகிறேன்" என்று சொல்லிப் புறப்பட்டாள்.

குமாரகிரி இலேசாக இளநகை புரிந்தான். "நீ இப்பொழுது வெளியே போகவேண்டியதில்லை. இங்கேயே உட்காரு. நான் இன்று இப்பொழுதே சமாதியில் ஆழப் போவதில்லை. உன்னிடம் கொஞ்சம் பேசவேண்டியிருக்கிறது" என்றான்.

அதைக் கேட்டதும் சித்திரலேகா தன் ஆசனத்தில் அமர்ந்து கொண்டாள்.

"சித்திரலேகா! கர்ம மார்க்கம், தர்ம மார்க்கம் இவ்விரண்டையும் மனிதன் சேர்ந்தாற் போலவே கடைப் பிடிக்க முடியாதா என்னும் விஷயத்தைப் பற்றித்தான் இவ்வளவு நேரமாக யோசித்துக் கொண்டிருந்தேன்" என்று ஆரம்பித்தான் குமாரகிரி.

"குருதேவா! தாங்கள் சொல்வது எனக்குச் சரியாக விளங்கவில்லை."

"நீ அன்று என்னிடம் தீக்ஷை பெறுவதற்காக வந்தபொழுது என்னைக் காதலிப்பதாகச் சொன்னாயே! அது உனக்கு நினைவிருக்கிறது அல்லவா?"

"ஆம், நன்றாக நினைவிருக்கிறது. நான் உண்மையைத் தானே சொன்னேன்? அதில் என்ன தவறு?" என்று கேட்டாள் சித்திரலேகா.

"அதற்காக நான் சொல்ல வரவில்லை. 'காதல் என்றால் என்ன அர்த்தம் என்று உனக்குத் தெரியுமா?' என்றுதான் கேட்கிறேன்" என்றான் குமாரகிரி.

"தெரியாமல் என்ன? இரண்டு ஆத்மாக்களிடையே ஏற்படும் தொடர்பைத்தான் காதல் என்று பெயர் சொல்லி அழைக்கிறோம்" என்றாள் சித்திரலேகா. (தொடரும்)

## இருபத்தாறும் அத்தியாயம்

# தியானம் கலைந்தது!

சிற்சிலரிடத்தில் சிற்சில சிறப்பியல்புகள் உண்டு. சிலர் தங்களுடைய கலை பொருந்திய வசீகரமான முகத் தோற்றத்தையும் குணாதிசயங்களையும் கொண்டு பிறர் மனதை மயக்கிக் கொள்ளை கொண்டு விடுகின்றனர். அவர்களுக்கு எந்த விதத்திலும் ஏற்றத்தாழ்வு இல்லாத சிறப்பியல்புகள் கொண்டவர்கள் கூட சிற்சில சமயம் அவர்களுக்கு அடி பணிய நேர்ந்துவிடுவது உண்டு. அடி பணிவதோடு மட்டுமா? அவர்களிடம் உள்ள சிறப்பியல்புகள் எல்லாம் மங்கிச் சோபை யிழந்து உருத் தெரியாமல் கூடப் போய்விடுவது உண்டு. அவர்கள் தாசானு தாசர்களாகக் குற்றேவல் புரியத் தொடங்கினாலும் ஆச்சரியப் படுவதற்கில்லை. சித்திரலேகா விடத்திலும் மேலே கூறியது போன்ற தனிச் சிறப்பு ஒன்று இருந்தது. சித்திர லேகாவுக்குத் தன்னிடத்தில் அம்மாதிரியானதொரு கவர்ச்சியிருந்த வசீகர சக்தி இருப்பதாகத் தெரியவே தெரியாது. இருந்தாலும் அவள் தன்னையறியாமலே தன்னுடைய அந்த மோகனாஸ்திரத்தைப் பிறர்மீது பிரயோகித்து வந்தாள். குமாரகிரியின் மீதும் அவள் அதைப் பிரயோகித்து விட்டாள். குமாரகிரிக்கும் தனிச் சிறப்பியல்புகள் இருக்கத்தான் செய்தன. ஆயினும் சித்திரலேகாவின் மனமோகன எழிலுருவத்துக்கெதிரே அவனுடைய மகிமை பொருந்திய சிறப்பியல்புகள் அனைத்தும் ஆதவனைக் கண்ட பனிபோல் ஓடி ஒளிய ஆரம்பித்தன. குமாரகிரி திக்குமுக்காடிப் போய் விட்டான். அவன் தன்னுடைய மகிமையைக் கொண்டு தன்னை அடக்கிக் கொள்ள முயன்றான். ஆனால் அவனால் தன்னைத் தானே அடக்கி ஆள முடிந்தால்தானே?



குமாரகிரியின் குடிசையிலே குமாரகிரியும் சித்திரலேகாவும் முதன் முதலாகச் சந்தித்தனர். அவர்களுடைய அந்தச் சந்திப்பு சிறிது சிறிதாக நெருங்கிய தொடர்பாகவும் பரிணமித்தது. குமாரகிரி சித்திரலேகாவிடமிருந்து விலகியிருக்கவே விரும்பினான். அவன் அவளிடமிருந்து எவ்வளவுக்கெவ்வளவு விலகியிருக்க முயன்றானோ, அவ்வளவுக்கவ்வளவு அவளிடம் நெருங்கிய தொடர்பு ஏற்பட்டது. அதைக் காணும் பொழுது அவனுக்கு வியப்பு மேலிட்டது. சித்திரலேகா குமாரகிரியுடன் அவனுடைய குடிசையிலேயே வாழ்ந்து வந்தாள். குமாரகிரி தியானத்தில் லயித்த பின்தான் சித்திரலேகா குடிசைக்குள் நுழைவாள். குடும்பக் காரியங்களில் கை தேர்ந்த குடும்பப் பெண்களைப் போல குடிசையின் சகலவிதமான ஏற்பாடுகளையும் அவளே கவனித்து வரலானாள். சித்திரலேகா குடிசைக்குள்ளே நுழைந்து விட்டால் போதும், குமாரகிரியினால் அதிகநேரம் தியானத்தில் லயித்திருக்க முடிவதில்லை. அவன் கண்கள் அவனையறியாமலே திறந்து சுற்று முற்றும் சுற்றிப் பார்க்கும். சித்திரலேகாவைத் தேடத் தொடங்கும். ஒரு கண நேரமாவது அவன் சித்திரலேகாவை வைத்த கண் வாங்காமல் பார்த்துவிட்டுத்தான் மறு காரியம் பார்ப்பான். அவன் என்ன செய்வான், பாவம்! அவன் கண்கள் அவன் சொன்னபடி கேட்டால்தானே! சித்திரலேகாவை ஒரு முறை ஒரு கணமாவது பார்த்தால்தான் அவற்றுக்குத் தாம் பெற்ற பயனைப் பெறுவதாக எண்ணம் போலும்! ஆகவே அவை தம்மைத் திருப்திசெய்துகொள்ளாதவரை அவன் பிடிக்கு அடிபணிவதில்லை. குமாரகிரி கண்களை இறுகமூடிக் கொண்டு தியானத்தில் லயிப்பதற்காகப் பிரும்மப் பிரயத்தனங்கள், பகீரதப் பிரயத்தனங்கள் எல்லாம் செய்து பார்ப்பான். ஆனால் அவனுக்கு வெற்றி கிட்டுவதே

இருக்குமேயானால், அது அவனுடைய நிய நடத்தையின் அறிகுறி என்று ஆராய்ச்சியும் முடிவும், பீஜகுப்த மன்னர் கண்டு தேர்ந்த முடிவுதானே?" என்று குத்தலாகக் குறுநகை பூத்தவாறு கேட்டான் சுவேதாங்கன்.

"ஆமாம், அவர் சொன்னது சரிதானே? அதில் ஏதாவது தவறு இருக்கிறதோ?" என்று வியப்புடன் கேட்டாள் யசோதரா.

"இல்லை, இல்லை. சாமர்த்தியசாலிகளுக்கு இதில் ஒரு தவறும் இல்லை. சமூகத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல் அதை உதறித் தள்ளி விட்டுத் தனித்து உயிர்வாழும் சாமர்த்தியம் படைத்த மனிதனுக்கு இந்தக் கொள்கை மிகவும் உசிதமானதுதான். என்னைக் கேட்டால் இதுதான் மகா உத்தமமானது என்றுகூடச் சொல்லுவேன். ஆனால் இந்த உலகம் இருக்கிறதே, இது அவ்வளவு சாமர்த்தியம் வாய்ந்ததல்ல. உதாரணமாக என்னையே எடுத்துக் கொள்ளுங்கள். நான் பீஜகுப்த மன்னருடைய ஊழியன். அவர் ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டியதுதான் என் கடமை. அவர் இடும் கட்டளைதான் என்னுடைய விருப்பமாக இருக்க வேண்டும். ஆயினும் எனக்கென்று தனி நோக்கங்களும் சிறப்புகளும் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் அந்த நோக்கங்களும் சிறப்புகளும் என்னிடம் இருந்து என்ன உபயோகம்? அல்லது யாருக்குத்தான் என்ன பிரயோஜனம்? நானோ பிறர்க்கு அடிமை செய்பவன். அடிமைக்குச் சுதந்திர உணர்ச்சியா? இது எங்கேயாவது நடக்கக்கூடிய காரியமா? சில சமயம் என்னுடைய உள்ளத்திலும் எல்லோருக்கும் இயல்பான பகைமைத் தீ எழுந்து கொழுந்து விட்டு எரியத்தான் செய்கிறது. அம்மாதிரி சந்தர்ப்பத்தில் கொழுந்து விட்டு எரியும் அந்தப் பகைமைத் தீயில் என்னை வார்த்து கலகத்தை உண்டு பண்ணுவது நல்லதா அல்லது உள்ளத்திலே எழும் அந்தத் தீயை அடக்கிக் கடமையில் கண்ணும் கருத்துமாய் இருக்க முயலுவது நல்லதா? இந்தக் கேள்விக்குப் பதில் தெளிவாயிருக்கும்பொழுது நான் வேறு பதில் சொல்லவேண்டுமா?" என்றான் சுவேதாங்கன்.



மிருத்யுஞ்ஜயர் தலை நிமிர்ந்து, "குழந்தாய் சுவேதாங்கா! நீ வீணில் விரோதம் பாராட்டுவது நல்லதல்ல" என்றார்.

யசோதரா மெதுவான குரலில், "ஸ்வாமி! தாங்கள் விரோதம் பாராட்டுவதில் தவறு ஒன்றும் இல்லை. தாங்கள் இம்மாதிரி இக்கட்டான நிலைமையில் கட்டுண்டிருப்பதைக் காண எனக்கு மிகவும் மன வருத்தமாயிருக்கிறது" என்றாள்.

சுவேதாங்கன் யசோதராவின் கண்களிலே அநுதாபம் கலந்த அன்பு ஒளி வீசுவதைக் கண்டான். அந்தக்கணம் அவனுடைய உள்ளத்திலே ஒரு விதப் புல்லரிப்பு ஏற்பட்டது.

டிருக்குமாறு கட்டளையிட்டு விட்டு அவர் களைப்பாறப் போய் விட்டார்" என்றான்.

அதற்குப்பின் மிருத்யுஞ்ஜயர், யசோதரா, சுவேதாங்கன் மூவரும் பலதரப்பட்ட விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர்.

அன்று காலையில் கண்ட இயற்கைக் காட்சிகளைப் பற்றியும் பீஜகுப்தனுக்கும் தனக்கும் நடந்த சம்பாஷணையைப் பற்றியும் யசோதரா சாங்கோபாங்கமாகத் தன் தந்தை மிருத்யுஞ்ஜயருக்கு எடுத்து உரைத்தாள். பீஜகுப்தனின் தர்க்க சாதுர்யத்தைக் கேட்டு மிருத்யுஞ்ஜயர் மிகவும் வியந்தார். பிறகு அவர் சுவேதாங்கனைப் பார்த்து, "குழந்தாய் சுவேதாங்கா! பீஜகுப்தனுக்கு உடல் நலம் சரியாக இல்லையா, என்ன? பார்ப்பதற்கு என்னவோ போல் இருக்கிறானே!" என்று கேட்டார்.

சுவேதாங்கன் பதில் சொல்லுவதற்கு வாய் எடுப்பதற்கு முன்பாகவே யசோதரா, "ஆமாம், ஆமாம்! எனக்கும் அப்படித் தான் தோன்றுகிறது. நான் இந்தக் கேள்வியைப் பீஜகுப்த மன்னரிடமே நேரில் கேட்டு விட்டேன். அவர் தனக்கு ஏதோ மன வருத்தம் ஏற்பட்டிருக்கிறது என்பதை ஒப்புக் கொண்டார். ஆனால் மன வருத்தத்துக்குக் காரணம் என்ன என்று நான் கேட்டதற்குத் தாம் காரணம் சொல்வதற்கில்லை என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லி விட்டார்" என்றாள். அதைச் சொல்லி முடித்ததும் யசோதரா தன் பார்வையைச் சுவேதாங்கன் பக்கம் திருப்பினாள்.

மிருத்யுஞ்ஜயர், "உலகத்தில் எத்தனையோ விஷயங்களுக்கு ஒளிவு-மறைவு வேண்டித்தான் இருக்கிறது. பீஜகுப்தன் அப்படி ஏதாவது ஒரு விஷயத்தைச்சொல்ல விரும்பாமல் மூடி மறைத்து வைக்க விரும்பினால் அது நியாயம்தான். அதில் தவறு ஒன்றும் இல்லை" என்றார்.

"அப்பா! தாங்கள் கூறுவது உண்மையாகவே இருக்கலாம். ஆனால் ஒரு மனிதன் ஒரு விஷயத்தை ஒளித்து மறைத்து ரகசியமாக வைத்துக் கொள்ள விரும்புகிறான் என்றால், அது அவனுடைய நடத்தையில் ஏதோ ஒரு குறை இருக்கிறது என்பதைத்தான் எடுத்துக் காட்டுகிறது. மனிதன் ஒரு விஷயத்தை ஒளித்து மறைத்து வைத்துக் கொள்ள விரும்புவானேன்? அவனுடைய அந்தரங்க விஷயங்கள் அம்பலமாகி விட்டால் அப்புறம் 'சமூகம் தன்னுடைய தீய நடத்தையைப் பற்றி அக்குவேறு ஆணி வேறாக ஆராயத் தொடங்கி விட்டால் என்ன செய்வது? தனக்குத் தீயவன் என்ற பட்டம் கட்டி விட்டால் என்ன செய்வது?' என்று அஞ்சி அஞ்சிச் சாகிறான். ஆகவேதான் மனிதன் தன்னுடைய ரகசியங்களை மூடி மறைத்து வைத்துக் கொள்ள விரும்புகிறான். ஆயினும் பீஜகுப்த மன்னரைப் பற்றி நான் திட்டமாகவும் தைரியமாகவும் சொல்ல முடியும். அவர் எந்த விஷயத்தையும் ஒளித்து மறைத்து வைத்துக் கொள்ளக் கூடியவர் அல்ல. அவருக்கு ஏற்பட்டிருக்கும் மன வருத்தத்துக்கும் காரணம் ஒளிவு மறைவானதல்ல. ஏனென்றால் அவரே என்னிடம் இந்த விஷயத்தைச் சொன்னார். ஆனால் அவர் அதை வெளியிடாததற்குக் காரணம் என்னவென்றால், தன் மன வருத்தத்தைச் சொல்லி அவர் பிறருடைய மனதைப் புண்படுத்த விரும்பவில்லை" என்று சொன்னாள் யசோதரா.

"மனிதனிடத்தில் ஒளித்து மறைத்து வைத்துக் கொள்ளக் கூடிய ரகசியங்கள்






## இருபத்தைந்தாம் அத்தியாயம்

# உள்ளத்தில் நீ!

சிற்றுண்டி அருந்தி முடித்ததும் யசோதரா பீஜகுப்தனின் அருகில் வந்து நின்று கொண்டு, "என் ஸ்வாமி! நாம் இன்னுமொரு தடவை உத்தியான வனத்தைச் சுற்றிப் பார்த்து வருவோமா?" என்று கேட்டாள்.

பீஜகுப்தனுக்கு இரவு தூக்கமே பிடிக்காததால் களைப்பு மேலிட்டிருந்தது. "அம்மணி! நான் மிகவும் களைத்துப் போய் விட்டேன். கால்கள் வேறு கெஞ்சுகின்றன. என்னால் ஒரு அடிகூட எடுத்துவைக்க முடியாது என்று தோன்றுகிறது. சுவேதாங்கனை வேண்டுமானால் அழைத்துக் கொண்டு போய்ச் சுற்றி வாருங்களேன்!" என்றான்.

எதிரே நின்று கொண்டிருந்த சுவேதாங்கனுக்குப் பீஜகுப்தன் சொன்னதைக் கேட்டதும் உள்ளத்திலே உற்சாகம் பொங்கியது. யசோதராவும் தானும் தனிமையில் உலாவப் போகப் போவதை நினைத்த மாத்திரத்திலேயே அவனுடைய மதிவதனத்தில் அளவு கடந்த மகிழ்ச்சி தாண்டவமாடியது. அவன் யசோதராவுடன் உலாவப் போவதற்காகத் தன்னைத் தயார்கூடச் செய்து கொண்டு விட்டான்.

ஆனால் அடுத்த கணமே யசோதரா சொன்ன வார்த்தைகள் அவனைத் தூக்கி வாரிப் போடச் செய்தன.

"நீங்கள் வரவில்லையென்றால் நானும் போகவில்லை. இங்கேயே உட்கார்ந்து பேசுவோம்" என்றாள் யசோதரா.

மிருத்யுஞ்ஜயரும் அதற்கேற்றாற் போல, "ஆமாம், அதுதான் சரி. அதிகமாக அலைந்தால் உடம்புக்கு ஆகாது" என்று யசோதரா சொன்னதையே ஆமோதித்தார்.

அதைக் கேட்டதும் சுவேதாங்கனுக்கு ஏற்பட்டிருந்த உற்சாகம் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் பறந்துவிட்டது. மகிழ்ச்சி தாண்டவமாடிக் கொண்டிருந்த அவனுடைய முகம் வாடிவிட்டது.

பிறகு நால்வரும் உட்கார்ந்து உரையாடிக் கொண்டிருந்தனர். சிறிது நேரத்துக்கெல்லாம் பீஜகுப்தன் சுவேதாங்கனைச் சற்றுத் தனியே அழைத்துச் சென்றான். "சுவேதாங்கா! நான் மிகவும் களைத்துப்போய் விட்டேன். ஆகையினால் நான் போய் சற்றுப் படுத்து உறங்குகிறேன். சமையல் ஆனதும் நீ என்னை எழுப்பி விடு. என்ன புரிந்ததா?—சரி, நீ போய் மதிப்புக்குரிய மிருத்யுஞ்ஜயருடன் உட்கார்ந்து பேசிக் கொண்டிரு. நாம் அவர்களைப் பொருட்படுத்தவில்லை என்ற எண்ணம் அவர்களுக்கு உண்டாகிவிடக் கூடாது. அதனால்தான் சொல்லுகிறேன். சரி, நான் வரட்டுமா?" என்று சொல்லி விட்டு அங்கிருந்து விடைபெற்றுச் சென்றான்.

சுவேதாங்கன் திரும்பித் தன் ஆசனத்தில் வந்து அமர்ந்தான். "எஜமானருக்கு மிகவும் களைப்பாயிருக்கிறதாம். என்னைத் தங்களுடன் உட்கார்ந்து பேசிக் கொண்

வில் தங்க இடமின்றி மிகவும் கஷ்டப்படுவான். உலகமெல்லாம் சுற்றி அலையும் உள்ளத்துக்கு ஒரு தங்குமிடம் கடவுள். அந்த விடுதியைப் பத்திரப்படுத்திக் கொள்ளுவது க்ஷேமம். இல்லாவிடில் சந்தோஷமும் அமைதியும் கெட்டுத் துக்கப் படுவோம். மகனே! வாழ்க்கையின் சந்தோஷம் முடிந்து அந்தகாரம் மூடிக் கொள்ளும் காலம் வரும். அப்போது நிம்மதியைக் காண ஒரு புகலிடம் வேண்டும். கடவுளாகிய விடுதியின் அவசியத்தை உணர்வோமாக.''



குடிப்பதற்குத் தண்ணீர் மொள்ளும்போது குளத்தினின்று லேசாக மேலேயுள்ள தெளிந்த தண்ணீரை எடுத்துக் கொள்ள வேண்டுமே ஒழிய சேற்றைக் கலக்கித் தண்ணீரைக் கெடுத்துக் கொள்ளக் கூடாது. உள்ளம் தூய நிலையடைந்து தரும வாழ்க்கை வாழ விரும்பினால் பக்தியை உறுதியாகக் கொண்டு தியானமும் உபாசனையும் மெள்ள நடத்திக் கொண்டுபோக வேண்டும். சாஸ்திரப்பிரவசனத்திலும் மீமாம்சங்களிலும் சமய தத்துவ வாதங்களிலும் காலம் கழித்து மூளையைக் குழப்பிக் கொள்ள வேண்டாம். நம்முடைய சிற்றறிவு சிறு குட்டைத்தண்ணீரைப் போன்றது. ரொம்பக் கலக்கி விட்டால் சேறு தான் மேலே வரும்.

தயிருக்குள் வெண்ணெய் உண்டு என்று அனைவருக்கும் தெரியும். ஆனால் தயிரைக் கடைந்தால்தான் வெண்ணெய் வருமேயொழிய, "தயிரில் வெண்ணெய் இருக்கிறது" "தயிரில் வெண்ணெய் இருக்கிறது'' என்று எவ்வளவு கத்தினாலும் வெண்ணெய் வராது. பரம்பொருளைக் காணவேண்டுமானால் பக்தியுடன் உள்ளத்தில் விருப்பத்தைக் கடைய வேண்டும். 'பரமாத்மா' என்றும் 'ஜீவாத்மா' என்றும் தத்துவம் பேசிக் கொண்டிருந்தால் மட்டும் போதாது. தாயைக் காணாத குழந்தை தாயைக் காண விரும்பி வருந்துவதைப் போல் ஆண்டவனை அடைய உள்ளத்தில் வருந்தி உருக வேண்டும்.

என்ற எண்ணம் எனக்குத் தோன்றிற்று. அவருடைய அவதார விழாவன்று இந்த வருஷம் சென்னை ராமகிருஷ்ண மடத்தார் என்னை அக்கிராசனம் வகிக்கச் சொன்னதை ஒப்புக்கொண்டு சபையில் பேசியபோது எனக்கு இந்த எண்ணம் உதயமாயிற்று. தமிழில் வெளியாகியிருக்கும் பல நூல்களின் மூலம் பகவான் ராமகிருஷ்ணருடைய உபதேசங்களைத் தமிழ் மக்கள் அறிவார்கள். ஆயினும் அவற்றிலிருந்து எடுத்து மறுமுறை நான் சொல்லலாம் என்று ஆரம்பிப்பது என் சொந்த உள்ள மகிழ்ச்சிக்காகவே. 'வியாசர் விருந்து'ம் அப்படித்தான் ஆரம்பித்தேன். அது ஓரளவு பிறருக்கும் பயன் பட்டதாக எண்ணுகிறேன். அவ்வாறு இதுவும் ஒருவேளை பயன்படலாம்.

நம்முடைய சமூகம் சுதந்திர வாழ்க்கை அடைந்து விட்டது. சுதந்திரத்துடன் சுகமும் பெற வேண்டுமானால் மக்கள் அற வழியில் நிற்க வேண்டும்; நின்றால், சுகமும் நிகரற்ற புகழும் பெறுவோம். 'கடவுளாவது! சாமியாவது!' என்று பலர் இந்நாட்களில் தைரியமாகப் பேசுகிறார்கள். இது நம்முடைய துர்ப்பாக்கியம். நாம் காணும் உலகமும் அற்புதப் பொருள்களும் வேகங்களும் ஒன்றினின்று ஒன்று உண்டாவதைக் காண்கிறோம். எல்லாம் நியதியின்படி நடைபெற்றும் சுழன்றும் வருகின்றன. நியதி தானாக உண்டாகி விடுமா? அனைத்துக்கும் காரணமான ஒரு வித்து இல்லாமல் இவ்வளவும் உண்டாவதற்கில்லை. சூன்யத்தினின்று பொருளோ வேகமோ நியதியோ உண்டாகாது அல்லவா? நாம் ரசித்துக்கொண்டு விமரிசனம் செய்யக் கூடாத தன்மை படைத்த ஒரு காரணம் இருந்தே தீர வேண்டும். அதுவே பரம் பொருள். நியதி, இயற்கையாகவே இருக்கிறது, அதற்குக் கடவுள் வேண்டியதில்லை என்று வாதித்து கடவுளுக்குப் பதிலாக இயற்கையைக் கொண்டாடுவதில் சாரம் ஒன்றுமில்லை.

கண்ணுக்குக் காணப்படவில்லை என்பது கடவுள் இல்லை என்பதற்கு ஒரு காரணமாகுமா? இரவில் நட்சத்திரங்கள் திரள் திரளாகக் காணப்படுகின்றன. பகலில் எல்லாம் மறைந்து போகின்றன. கண்களைக் கொண்டு காணாத பொருள்கள் இல்லவே இல்லையென்று சாதிக்க முடியுமா? நம்முடைய அறிவின வாழ்க்கையில் கடவுளைக் காணவில்லை என்கிற காரணத்தினால் கடவுளே இல்லை, கடவுளுக்கு அவசியமும் இல்லை என்று சாதிக்க வேண்டாம்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஒரு நாள் சொன்னார்: "பட்டணத்துக்கு ஒருவன் வந்து இறங்கினதும் முதலில் ஒரு இடம் தேடி மூட்டை முடிச்சுக்களை வைத்து விட்டுப் பிறகு ஊர் பார்க்கப் போகிறான். பகலெல்லாம் சுற்றித் திரிந்து விட்டு இரவு வந்ததும் தான் ஏற்படுத்திக் கொண்ட விடுதிக்குப் போய்ப் படுக்கிறான். இப்படி முன்னாலேயே தங்குவதற்கு ஒரு இடம் ஏற்படுத்திக் கொண்டிராவிட்டால், பகலெல்லாம் வேடிக்கையாகக் கழித்து விட்டு இர

# ராமகிருஷ்ண உபநிஷதம்

மணியம்

## 1. பரம் பொருள்

ராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய உபதேசங்கள் உபநிஷத்துக்குச் சமானம் என்றால் மிகையாகாது. பழைய காலத்து ரிஷிகளைப் போன்ற தபோதனர் ஒருவர் நம்முடைய காலத்தில் அவதரித்தார். அவரே ராமகிருஷ்ண பரமஹம்ஸர். அவர், நூல் ஏதும் எழுதவில்லை; பிரசங்கமும் செய்யவில்லை. சுத்த சந்நியாச வாழ்க்கை வாழ்ந்து மறைந்தார். பக்தியுடன் பக்கத்தில் உட்கார்ந்து கேட்ட சீடர்களுடன் பேசிய பேச்சே அவருடைய உபதேசம். அப்படி அவர் பேசியதைக் கேட்ட சீடர்கள் பிறகு அந்த உபதேசங்களை எழுதி வைத்திருக்கிறார்கள்.

படித்தவர்களும் நன்றாக எழுதத் தெரிந்தவர்களும் மிக நல்ல வியாசங்களையும் உபதேசங்களையும் எழுத முடியும்; அம்மாதிரி பலர் எழுதியும் வருகிறார்கள். ஆனால் அவற்றுக்கு உண்மையான வேகம் இல்லை. ஸ்ரீ ராமகிருஷ்ணர் தம் உள்ளத்திலும் வெளி உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களிலும் பகவானைக் கண்ட மகான். நாம் ஒருவரை ஒருவர் பார்க்கும்போது எவ்வளவு நிச்சயமும் உறுதியும் நிறைந்த உணர்வோடு பார்க்கிறோமோ, அவ்வாறு ராமகிருஷ்ணர் எல்லாப் பொருள்களிலும் பகவானைக் கண்டார். இத்தகைய அற்புத ஞானிகள் பல நாடுகளில் அவ்வப்போது அவதரிக்கிறார்கள்.

தெய்வீக வாழ்க்கை வாழ்ந்த மக்களின் பேச்சுக்கே ஒரு தனியான வேகம் உண்டு. அவர்களுடைய உபதேச மொழிகளுக்கு உள்ள சக்தி வெறும் படிப்பும் அறிவும் படைத்தவர்களின் தருமோபதேசத்துக்கு இருப்பதில்லை. மகரிஷிகள் பேசும்போது அவர்களுடைய வாழ்க்கை முழுவதும் பேசுகிறது; அறிவு மட்டுமல்ல. மீமாம்ச வாதங்களும் விமரிசனங்களும் எவ்வளவு அழகாகவும் பொருட்செறிவு கொண்டனவாகவும் இருந்தாலும் ஆண்டவன் அருள்பெற்ற மகான்களின் சம்பாஷணைகளில் காணும் வேகத்துக்கு ஈடாகாது.

ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் இத்தகைய உபதேச மொழிகளைத் தமிழ் மக்களுக்கு எடுத்துச் சொல்லலாம்



## மதுரை தேவி பால விநோத சங்கீத சபா

அன்புமிக்க "கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

மகாத்மாஜியின் தூய பாதம் பட்டு அதன் மூலம் புனிதம் அடைந்தது மல்லாமல், அவருடைய பாராட்டுதலையும் பெற்ற மதுரை தேவி பால விநோத சங்கீத சபை தற்கால நெருக்கடியின் காரணமாய் சோதனைக்காளாகி யிருந்தும் உலகம் போற்றும் அவ்வுத்தமருக்குச் செய்ய வேண்டிய கடமைக்காக ஏதோ தன்னால் இயன்றதை மனப்பூர்வமாய் செய்யக் கருதி **ஸ்ரீ ஐயப்பன், ஸ்ரீமத் சம்பூர்ண ராமாயணம்** இவ்விரண்டு நாடகத்தை வைத்து, அந் நாடகங்களுக்கு வசூலான தொகை ரூ. 2102—3—0ம் பெருமகிழ்ச்சியோடு மகாத்மாஜியின் ஞாபகார்த்த ஸ்தாபி நிதிக்காக **அனுப்பியிருக்கிறேன்.**

இப்புனித கைங்கரியத்தில் ஈடுபட்டிருக்கும் அனைவரும் இதைப்போல் நம் தாய்நாடு பூராவும் மகாத்மாஜிக்கு ஞாபகச் சின்னம் நிறுவி ஒப்பற்ற சேவை செய்வதற்காக அவர்களுக்கு நோயற்ற பெரு வாழ்வு அளிக்க வேண்டுமென்று எல்லாம் வல்ல ஸ்ரீ தேவி ஐயப்பனை மனதாரப் பிரார்த்திக்கிறேன்.

அன்புள்ள T. S. [illegible]



அன்று ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருடன் ஆரம்பமான மாபெரும் மறுமலர்ச்சிதான் இன்று இந்தியாவின் பூரண சுதந்திரமாகப் பூத்திருக்கிறது.

• • •

வேத உபநிஷதங்கள் இறைவனின் இயல்பை உணர்த்தும் புண்ணிய நூல்கள். அவற்றை நம் போன்ற பாமர மக்களுக்கு உணர்த்த ஸ்ரீ சங்கரர் ஸ்ரீ ராமானுஜர் போன்ற மகான்கள் பாஷ்யங்களும் வியாக்யானங்களும் எழுதினார்கள். மனிதனுக்கு வாழ்க்கை நடத்தும் விதத்தை எடுத்துக் காட்டும் நூல் பகவத்கீதை. அதை நம் போன்றவர்கள் உணர்வதற்குப் பல பெரியோர்கள் வியாக்யானம் செய்திருக்கிறார்கள். "கண்ணன் காட்டிய வழி" இன்னதென்பதை நாம் நன்கு தெரிந்து கொள்ளும் பொருட்டு நம்முடைய காலத்தில் நாம் அறிந்த மகானாகிய ராஜாஜி வழி காட்டும் நூல் எழுதியிருக்கிறார். உபநிஷதங்கள் விவரிக்கும் பரம்பொருளின் சொரூபத்தை "உபநிஷதப் பலகணி" மூலமாக நாம் ஓரளவு பார்க்கும்படி செய்திருக்கிறார். ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய உபதேசங்களுக்கு அதே விதமான தொண்டை ராஜாஜி இப்போது செய்ய முன்வந்திருக்கிறார்.

உலகத்து மகான்கள் பலர் தாங்கள் போதிக்க விரும்பிய விஷயங்களை அருமையான உதாரணங்களுடன் சொன்னார்கள். ஏசுகிறிஸ்துவும் நம் திருவள்ளுவரும் கையாண்டிருக்கும் உவமைகள் அற்புதமானவை. ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸரும் அத்தகைய அருமையான வாழ்க்கை உவமைகளையும் சின்னஞ்சிறு உதாரணக் கதைகளையும் கையாண்டு தாம் சொல்ல வந்த உண்மைகளை உணர்த்தினார்.

ராஜாஜியின் பேச்சுக்களைக் கேட்டிருக்கும் நாம் அவரும் அதே முறையை நன்கு கையாளுகிறார் என்பதை அறிந்திருக்கிறோம். எனவே ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய உவமைகள் நிறைந்த உபதேசங்களை அறிந்து நமக்கு எடுத்துச் சொல்வதற்கு ராஜாஜியைத் தவிர வேறு யாரை நாம் தேடவேண்டும்?

தெய்வ மனிதராகிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸருடைய திரு உருவத்தையும் அவர் நெடுங்காலம் தங்கியிருந்து தமது உபதேசங்களை அருளிய தக்ஷிணேசுவரத்திலுள்ள காளிமாதாவின் ஆலயத்தையும் நமது இந்தக் "கல்கி" இதழின் அட்டைப் படத்தில் நேயர்கள் காணலாம்.

அட்டைப்பட விளக்கம்

# தெய்வ-மனிதர்

சில தினங்களுக்கு முன் சென்னை தினப் பத்திரிகைகளில் "ராஜாஜி இலங்கையில் நடைபெறும் ஒரு கலாசாலை விழாவை ஆரம்பித்து வைப்பதற்காக இலங்கைக்குச் செல்வார்" என்று ஒரு செய்தி வெளியாகியிருந்தது.

ராஜாஜிக்குத் தற்சமயமோ அல்லது சமீப காலத்திலோ இலங்கைக்குப் போகும் உத்தேசமே கிடையாது. தமிழகத்தில் நிம்மதியாகத் தங்கியிருந்து கூடுமான வரையில் சமய, சமூக, இலக்கியத் தொண்டுகள் செய்ய வேண்டும் என்பது ராஜாஜியின் விருப்பம். ராஜாஜி இப்போது இலங்கைக்குப் போகிறார் என்னும் செய்திக்கு எவ்வித ஆதாரமும் இல்லையென்றாலும், அத்தகைய தவறான செய்தி கொழும்பிலிருந்து தந்தி மூலம் வந்து லட்சக் கணக்கான பத்திரிகைப் பிரதிகளில் அச்சாகி விட்டது.

ராஜாஜி சென்னையில் தங்கியுள்ள இடம் பலருக்கும் தெரியும். வண்டி வசதிகளும் தபால் தந்தி சாதனங்களும் சென்னையில் ஏராளமாக இருக்கின்றன. அரை மணி நேரத்தில் ராஜாஜி அவர்களையே நேரில் கேட்டுச் செய்தி உண்மையா, இல்லையா என்பதைத் தெரிந்து கொள்ள முடியும்.

இவ்வளவு வசதிகள் இருந்தும் ராஜாஜியைப் பற்றி ஒரு தவறான செய்தி பத்திரிகைகளில் பிரசுரமாவது இந்தக் காலத்தில் சாத்தியமாகியிருக்கிறது!

அங்ஙனமாயின், கண்ணால் காண முடியாதவரும் அடிமுடியில்லாதவரும் பல உருவம் படைத்தவரும் உருவமே இல்லாதவரும் அண்மைக்கு அண்மையிலும் அப்பாலுக்கு அப்பாலுமாய் உள்ளவருமான கடவுளைப் பற்றிய உண்மையான விவரங்களைத் தெரிந்து கொள்வது எவ்வளவு கடினமான காரியம்?

கடவுளைப் பற்றிய உண்மையை மனிதர்களுக்குத் தெரியப்படுத்தும் சக்தி வாய்ந்த மகான்கள் உலகத்தில் அபூர்வமாகத் தோன்றுகிறார்கள். வாக்கு வாதங்களினாலும் விவகாரங்களினாலும் நிரூபிக்க முடியாத பரம்பொருளை அந்த மகான்கள் ஆத்மாநுபூதியினால் தாங்கள் உணர்ந்து பிறருக்கும் உணர்த்தும் சக்தி வாய்ந்திருக்கிறார்கள். அத்தகைய பெரியார்களுடைய பொன்மொழிகள் வேத நூல்கள் என்று போற்றப்படுகின்றன. ஆயினும் காலடைவில் அந்தப் பொன்மொழிகளும் சிதைந்து உருத்தெரியாமல் போய் விடுகின்றன. வேத நூல்களின் கருத்தை அறிவது கஷ்டமாகி விடுகிறது. அவற்றின் உண்மைப் பொருளை மாந்தருக்கு மறுபடியும் எடுத்துக் காட்டி விளக்குவதற்குத் தெய்வ மனிதர்கள் அவதாரம் எடுக்க வேண்டி வருகிறது. இந்த அவதார பரம்பரையில் சமீப காலத்தில் பாரத நாட்டில் அவதரித்த தெய்வ மனிதர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

* * *

இந்தியா அரசியல் துறையில் அன்னியர்களுக்கு அடிமைப்பட்டிருந்ததோடல்லாமல் இந்தியர்கள் ஆங்கில நாகரிகத்துக்கும் ஆங்கிலப் படிப்புக்கும் பரிபூரணமாக அடிமைப்பட்டிருந்த நாளில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் தோன்றினார். ஆங்கிலக் கல்வியும் ஆங்கில நாகரிகமும் இந்தியாவிலேயே வங்காளத்திலேதான் அதிகமாகப் பரவியிருந்தன. புதிய படிப்பாளிகள் இந்தியாவின் புராதனப் பெருமையையும் பண்பாட்டையும் அடியோடு மறந்திருந்தார்கள். ஹிந்து மதத்தைக் குருட்டு நம்பிக்கைகளின் களஞ்சியம் என்று எண்ணினார்கள். இந்தியாவின் பழைய கலைகள் இலக்கியங்களையெல்லாம் வெறுங் குப்பையென்று தள்ளினார்கள். இந்திய நடை உடை பாவனைகளை அநாகரிகம் என்று வெறுத்து மேனாட்டு நடை உடை பாவனைகளில் மோகம் கொண்டார்கள்.

இத்தகைய சூழ்நிலையில் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் அவதரித்தார். அவர் ஆங்கிலப் பள்ளிக்குச் செல்லவில்லை. எந்தப் பள்ளிக்குமே செல்லவில்லை. புத்தகங்களை கையினாலும் தொடவில்லை. ஆயினும் அவருடைய திருவாக்கில் ஒளிர்ந்த சக்தி ஆங்கிலங் கற்ற மேதாவிகளையெல்லாம் ஆட்கொண்டது. ஆங்கிலத்தில் கரைகண்ட அறிஞர்கள் அவருடைய காலடியில் அமர்ந்து உபதேசம் கேட்டார்கள். கேட்டுத் தங்கள் வாழ்க்கையில் பயன் கண்டார்கள்.

ஆங்கிலம் படித்த இளைஞர்கள் பலர் பரமஹம்ஸரின் சீடர்களானார்கள். அவர்களில் சுவாமி விவேகானந்தர் அமெரிக்காவுக்குச் சென்று ஹிந்து சமயத்தின் பெருமையை நிலை நாட்டினார். இந்தியாவின் புராதன பண்பாட்டின் சிறப்பை உலகமறியப் பறைசாற்றினார்.

பாரத நாட்டைச் சூழ்ந்திருந்த மேனாட்டு நாகரிகமாகிய மாயை அகன்றது. இந்திய மக்கள் தங்கள் ஆத்மாவைக் கண்டு ஆனந்தங் கொண்டார்கள்.

கொஞ்சங்கூட விரும்பவில்லை. அதிலும் அதிகார வர்க்கம் பச்சாத்தாபம் காட்ட வேண்டும் என்றும், சைன்யத்தின் ராஜ பக்தியைக் கலைக்கப் பார்த்த அலி சகோதரர்களை விடுதலை செய்ய வேண்டும் என்றும் காந்திஜி சொன்னது ஸர் சங்கரன் நாயருக்குப் பொறுக்கவில்லை. அதிகார வர்க்கத்தின் தாஸானுதாஸனுக்கும் மேலான நிலையை அச்சமயம் ஸர் சங்கரன் நாயர் அடைந்திருந்தார். ஆகையால், "அதிகார வர்க்கம் பச்சாத்தாபம் காட்டவாவது? மகாத்மா வல்லவா மன்னிப்புக் கேட்க வேண்டும்?" என்று கர்ஜித்தார். பிறகு இப்படிப்பட்ட மனப்பான்மை கொண்ட மகாத்மாவுடன் எந்தவிதமான சம்பந்தமும் பேச்சு வார்த்தையும் வைத்துக் கொள்ளத் தமக்கு விருப்பமில்லை என்று சொல்லிவிட்டு மகாநாட்டின் தலைமை ஸ்தானத்தைக் காலி செய்து மகாநாட்டிலிருந்து வெளியேறி விட்டார்.

பிறகும் அவர் சும்மா இருக்கவில்லை. மகாத்மாவைத் தாக்கி ஆங்கிலேயர்களால் நடத்தப்பட்ட பத்திரிகைகளுக்குக் கட்டுரைகள் எழுதினார். "மகாத்மாவும் அராஜகமும்" என்ற புத்தகமும் எழுதினார்.

மகாநாட்டிலிருந்து ஸர் சங்கரன் நாயர் எழுந்து போனதைப் பின்பற்றி வேறு யாரும் போகவில்லை. அந்த நாடக நிகழ்ச்சியை மற்ற மிதவாதிகள் விரும்பவும் இல்லை. உண்மையில் அவர்களில் பெரும்பாலோர் மகாத்மா கூறியதின் நியாயத்தை ஒப்புக் கொண்டார்கள். எனவே, ஸர் சங்கரன் நாயருக்குப் பதிலாக ஸர். விசுவேசுவரய்யாவைச் சபைத் தலைமை வகிப்பதற்குத் தேர்ந்தெடுத்தார்கள். பிறகு தடைப்பட்ட நடவடிக்கைகள் தொடர்ந்து நடைபெற்றன.

மகாத்மாவின் கருத்தை யொட்டித் தீர்மானங்கள் திருத்தி எழுதப் பட்டன. முக்கியமாக, அலி சகோதரர்களையும் பத்வாக் கைதிகளையும் விடுதலை செய்ய வேண்டும் என்று சேர்க்கப்பட்டது.

ஆனால் மகாத்மாவின் பஞ்சாப், கிலாபத், சுயராஜ்யக் கோரிக்கைகளைச் சர்வ கட்சி மகாநாடு அப்படியே ஒப்புக் கொள்ளவில்லை.

"மகாத்மா கோரிக்கைகளின் நியாயா நியாயங்களைப் பற்றி இந்த மகாநாடு யோசனை செய்யவே இல்லை. அவை சர்க்கார் கூட்டும் வட்ட மேஜையில் தீர்மானிக்கப்பட வேண்டியவை. அந்த வட்ட மேஜை மகாநாட்டுக்குப் பூர்வாங்கமாக அலி சகோதரர்கள் உள்ளிட்ட அரசியல் கைதிகள் எல்லாரையும் விடுதலை செய்ய வேண்டும்" என்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. ஜனப் ஜின்னா கூட அதை ஒப்புக் கொண்டார்.

மகாநாட்டின் இரண்டாம் நாள் இரவு ஜனப் ஜின்னா மகாத்மாவை அவருடைய ஜாகையில் வந்து பார்த்து, "உங்களுடைய தீர்க்க திருஷ்டியையும் உறுதியையும் ரொம்பவும் பாராட்டுகிறேன்" என்று சொல்லி விட்டுப் போனார்.

சர்வ கட்சி மகாநாட்டுத் தீர்மானங்கள் லார்ட் ரெடிங் சர்க்காருக்கு அனுப்பப் பட்டன. ஜனப் ஜின்னா பதில் கோரி தந்தி மேல் தந்தி அடித்தார். பண்டித மாளவியா மறுபடியும் லார்ட் ரெடிங்கை நேரிலேயே பேட்டி கண்டு பேசினார்.

ஒன்றும் பயன்படவில்லை. ஏனெனில் காந்திஜியுடன் ஒரு ராஜி செய்து கொள்ள வேண்டிய அவசியம் லார்டு ரெடிங்குக்கு இல்லாமற் போய் விட்டது. வேல்ஸ் இளவரசர் சுற்றுப் பிரயாணம் அதற்குள் முடிந்து விட்டது. காங்கிரஸ் ஆணையினால் வேல்ஸ் இளவரசர் பகிஷ்காரம் நாடெங்கும் வெற்றிகரமாக நடந்து விட்டது. இதனால் கோபங் கொண்டிருந்த லார்ட் ரெடிங் எப்படியும் மகாத்மாவைத் தொலைத்து அவருடைய இயக்கத்தை நசுக்கி விடுவது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருந்தார்.

ஆகவே பம்பாயில் கூடிய சர்வகட்சி மகாநாடு என்னும் நாடகத்தினால் பயன் எதுவும் விளையவில்லை.

தார்கள். மகாத்மாவும் அதுவே சரி என்று ஒப்புக்கொண்டார்.

சர்வகட்சி மகாநாட்டுக்கு ஸர் சங்கரன் நாயர் சபாநாயகராக நியமிக்கப்பட்டார். ஸர் சங்கரன் நாயர் பழைய காலத்துக் காங்கிரஸ் வாதிகளில் ஒருவர். ஒரு வருஷம் காங்கிரஸுக்கு அக்கிராசனமும் வகித்திருக்கிறார். சர்க்கார் உத்தியோகத்துக்கு அப்போதெல்லாம் காங்கிரஸ் ஒரு ஏணியாக உபயோகப்பட்டு வந்தது. அந்த ஏணியில் ஏறி உச்சியை அடைந்தவர் ஸர் சங்கரன் நாயர். இந்திய சர்க்காரின் நிர்வாக சபையில் அங்கத்தினராக உத்தியோகம் பார்த்து 'ஸர்' பட்டமும் அடைந்தவர். இப்போது அவர் 'மாஜி தேச பக்தர்' என்ற நிலைமையில் இருந்தார். அதிகார வர்க்கத்தின் பரமபக்தரா யிருந்தார். மகாத்மாவையும் அவருடைய ஒத்துழையாமை — சட்டமறுப்பு இயக்கங்களையும் தீவிரமாக விரோதித்தார். அத்தகைய மனிதரைச் சர்வகட்சி மகாநாட்டுக்குச் சபா நாயகர் ஆக்குவதாகச் சொன்னார்கள். ஆயினும் அதை மகாத்மா காந்தி ஆட்சேபிக்கவில்லை.

முதல் நாள் மகாநாடு கூடியதும் பண்டித மாளவியா தமது முகவுரைப் பிரசங்கத்தைச் செய்தார். சுருக்கமாகப் பேசுவதற்கு மகாத்மா எப்படிப் பேர் போனவரோ அப்படியே பண்டித மாளவியா நீளமான பிரசங்கம் செய்வதில் பெயர் போனவர். அவர் அன்று ஆதிகாலத்திலிருந்து, அதாவது இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி ஆரம்பித்த நாளிலிருந்து தொடங்கினார். பிறகு காங்கிரஸ் ஆரம்பித்த வரலாற்றுக்கு வந்தார். பிறகு ஹோம்ரூல் இயக்கம், ரவுலட் சட்டம், பஞ்சாப் படுகொலை, கிலாபத் அநீதி, ஒத்துழையாமை இயக்கம் எல்லாவற்றையும் பற்றிச் சாங்கோபாங்கமாகப் பேசினார். மகாத்மாவின் பெருமையையும் தேசத்தில் அவருடைய செல்வாக்கையும் பாராட்டித் தற்போது தேசத்தில் ஏற்பட்டிருக்கும் நிலைமையில் ஒத்துழையாமை இயக்கத் தலைவர்களுக்கும் பிரிட்டிஷ் சர்க்காருக்கும் ராஜி ஏற்பட வேண்டிய அவசியத்தைப் பற்றி வற்புறுத்தினார். இதற்காக பிரிட்டிஷ் சர்க்கார் ஒரு வட்ட மேஜை மகாநாடு கூட்ட வேண்டும் என்றும் அதை வற்புறுத்தவே இந்த சர்வகட்சி மகாநாடு கூட்டியதாகவும் தெரியப்படுத்தினார்.

பிறகு மாளவியாவின் பிரேரணையின் பேரில் ஸர் சங்கரன் நாயர் சபாநாயகராகத் தேர்ந்தெடுக்கப் பட்டுத் தலைமைப் பீடத்தில் அமர்ந்தார். அவர் சில வார்த்தைகள் கூறிய பிறகு, ஜனாப் ஜின்னா அந்த மகாநாட்டைக் கூட்டியவர்கள் தயாரித்திருந்த நகல் தீர்மானங்களைப் பிரேரணை செய்தார். அத்தீர்மானங்களைச் சில மிதவாதிகள் ஆமோதித்தார்கள்.

மகாத்மாவின் அபிப்பிராயத்தைச் சொல்லும்படி கேட்டதின் பேரில் அவர் பேச எழுந்தார். தாம் காங்கிரஸின் சார்பாகவோ தனிப்பட்ட முறையிலோ அந்த மகாநாட்டுக்குப் பிரதிநிதியாக வரவில்லையென்பதை முதலில் தெளிவு படுத்தினார். மகாநாடு கூட்டிய தலைவர்களின் நல்ல நோக்கத்தை ஒப்புக் கொண்டு பாராட்டினார். ஆனால் ஜனாப் ஜின்னா பிரேரேபித்த தீர்மானங்களினால் உத்தேசித்த பலன் விளையாது என்று தெரிவித்தார்.

பஞ்சாப், கிலாபத், சுயராஜ்யம் ஆகிய இந்த மூன்று விஷயங்களையும் பற்றிக் காங்கிரஸின் கோரிக்கைகள் என்னவென்பதை விளக்கி மேற்படி கோரிக்கைகள் குறைக்க முடியாத அடிப்படைக் கோரிக்கைகள் என்பதை வற்புறுத்தினார். ஆயினும் சர்க்கார் வட்ட மேஜை கூட்டுவதில் ஆட்சேபம் எதுவும் இல்லையென்றும் அதில் காங்கிரஸ் கலந்து கொள்ளுவதற்குக் காங்கிரஸின் நிபந்தனைகள் என்னவென்றும் விளக்கினார்.

ஜனாப் ஜின்னாவின் நகல் தீர்மானங்கள் பண்டித மாளவியா, குன்ஸ்ரு முதலியவர்கள் கல்கத்தாவிலிருந்து மகாத்மாவுக்கு அனுப்பிய தந்திகளை யொட்டியிருந்தன. மகாத்மாவோ தமது பழைய பல்லவியையே மறுபடியும் வற்புறுத்திப் பாடினார். அதாவது வட்டமேஜை மகாநாட்டுக்குப் பூர்வாங்கமாகப்புதிய அடக்கு முறைச் சட்டங்களின் கீழ் (அதாவது கிரிமினல் லா அமெண்ட்மெண்ட் சட்டம், இராஜத்துவேஷக் கூட்டச் சட்டம் இவற்றின் கீழ்க்) கைது செய்தவர்களை மட்டும் விடுதலை செய்தால் போதாது. அலி சகோதரர்கள் உள்ளிட்ட பத்வா கைதிகளையும் மற்றும் 124 ஏ, 144 முதலிய சாதாரணச் சட்டப் பிரிவுகளின் கீழ்க் கைதிகளையும் விடுதலை செய்ய வேண்டும் என்றும் வற்புறுத்தினார். பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தார் சமீபத்தில் கையாண்டு வரும் அடக்கு முறைக் கொடுமைகளை எடுத்துச் சொல்லி, அந்தக் கொடுமைகளைச் செய்ததற்காக அதிகார வர்க்கத்தார் உண்மையான பச்சாத்தாபம் காட்ட வேண்டும் என்றும், எல்லாக் கைதிகளையும் விடுவித்தால் உண்மையான பச்சாத்தாபம் கொண்டதற்கு அறிகுறியாயிருக்கும் என்றும் தெரிவித்தார்.

மகாத்மாவின் பேச்சைச் சபைத் தலைமை வகித்த ஸர் சங்கரன் நாயர்

என்று நான் எண்ணியிருந்தேன். ஆனால் கடவுளுடைய விருப்பம் வேறுவிதமாயிருப்பதாகத் தெரிகிறது. நம்மை இப்போதே பூரணமாகப் பரிசோதித்துவிட இறைவன் விரும்புகிறார் போலும். கடவுளுடைய பெயரால் அந்த இறுதிப் போராட்டத்தை ஆரம்பிப்போம்."

மேலே கண்டவாறு மகாத்மா காந்தி எழுதினார். இதிலிருந்து அச்சமயம் காந்திஜியின் மனப்போக்கை நாம் அறியலாம். அதாவது அதிகாரவர்க்கத்தாரின் கொடூரமான அடக்குமுறைகளினால் ஜனங்கள் அத்துமீறிச் சாத்வீக வரம்பைக் கடந்துவிடுவார்களோ என்ற பயம் காந்திஜிக்கு இருந்தது. அந்த பயத்தை உண்டாக்கும்படியான சில சம்பவங்களும் நாட்டில் அங்குமிங்கும் நிகழ்ந்து வந்தன. உதாரணமாக, வேல்ஸ் இளவரசர் சென்னைக்கு ஜனவரி மாதம் 13உ விஜயம் செய்தபோது பொது ஜனங்களில் ஒரு சாரார் வரம்புமீறிய காரியங்களைச் செய்துவிட்டார்கள். அன்றைய தினம் மற்ற நகரங்களில் நடந்தது போலவே சென்னையிலும் ஹர்த்தால் நடந்தது. ஆனால் ஒரு சிலர் ஹர்த்தாலை அனுஷ்டிக்கவில்லை. வில்லிங்டன் சினிமாவின் சொந்தக்காரர் ஒரு பார்ஸி கனவான். அவர் சினிமாவை அன்று மூட மறுத்துவிட்டார். தவிர, ஜஸ்டிஸ் கட்சிக்காரர்கள் வேல்ஸ் இளவரசரின் வரவேற்பில் கலந்து கொள்ளத் தீர்மானித்திருந்தனர். வில்லிங்டன் சினிமாவைப் பொது ஜனங்கள் தாக்க முயன்றபோது அந்த சினிமாவின் சொந்தக்காரர் ஜனங்கள்மீது துப்பாக்கியால் சுட்டார். ஜஸ்டிஸ் கட்சியின் அப்போதைய தலைவரான ஸர் பி. டி. தியாகராஜ செட்டியாரின் வீட்டை ஜனங்கள் முற்றுகை யிட்டுத் தொல்லை விளைவித்தார்கள். இதை யெல்லாம் அறிந்ததும் மகாத்மா மிக்க மனம் வருந்தினார். அன்றைய தினம் சென்னையில் நடந்த அசம்பாவிதங்களைப் பலமாகக் கண்டித்து "எங் இந்தியா"வில் எழுதினார்.

இவ்விதம் ஒரு பக்கத்தில் சர்க்கார் அடக்கு முறைகளையும் மற்றொரு பக்கத்தில் பொது ஜனங்களின் பலாத்காரத்தையும் எதிர்த்து நின்ற காந்திமகான் மூன்றாவது பக்கத்தில் மிதவாதிகளின் சரணாகதி முயற்சிக்கும் பதில் சொல்ல வேண்டி நேர்ந்தது.

கல்கத்தாவிலும் ஆமதாபாத்திலும் தோல்வியுற்ற பண்டித மாளவியா அத்துடன் தம் முயற்சியை நிறுத்தவில்லை. பம்பாய்க்கு வந்து அங்கே தம் முயற்சியை மீண்டும் ஆரம்பித்தார். பம்பாயில் பண்டித மாளவியாவுக்கு அப்போது முக்கிய துணைவரா யிருந்தவர் ஜனாப் ஜின்னா. பம்பாய் நகரத்தின் பொது வாழ்வில் அப்போது ஜனாப் ஜின்னா மிகவும் முக்கியமான ஸ்தானத்தை வகித்து வந்தார். காங்கிரஸ் ஸ்தாபனத்திலும் ஜனாப் ஜின்னாவுக்கு அதுவரையில் நல்ல மரியாதை இருந்தது. ஆனால் மகாத்மாவின் சட்டமறுப்பு முறையை ஜனாப் ஜின்னா ஒத்துக் கொள்ளவில்லை. கிலாபத் இயக்கத்தில் அவருக்குச் சிறிதும் உற்சாகம் கிடையாது. அலி சகோதரர்களை அவருக்குக் கொஞ்சமும் பிடிக்காது.

மகாத்மா காங்கிரஸில் சேர்ந்த பிறகு காங்கிரஸின் போக்கே வேறு விதமாகப் போய்க் கொண்டிருந்ததைப் பல மிதவாதிகள் விரும்பாததுபோல் ஜனாப் ஜின்னாவும் விரும்பவில்லை.

ஆகவே பண்டித மாளவியாவும் ஜனாப் ஜின்னாவும் சேர்ந்து ஜனவரி மாதம் 14-ந் தேதி 15-ந் தேதிகளில் பம்பாயில் சர்வ கட்சி அரசியல் மகாநாடு ஒன்று கூட்டினார்கள். இந்தியாவில் அரசியல் துறையில் பிரபலமாயிருந்தவர்களை யெல்லாம் இந்த மகாநாட்டுக்கு அழைத்தார்கள். மகாத்மாவையும் மற்றும் சில காங்கிரஸ் தலைவர்களையும்கூட அழைத்தார்கள். ஆனால் அழைக்கப் பட்டவர்களில் பெரும்பாலோர் பழுத்த மிதவாதிகள்; அல்லது பட்டம் பதவிகளில் ஆசைகொண்ட அரசியல் பிரமுகர்கள். தேசபக்தி, தேசிய உணர்ச்சி,—இவை யெல்லாம் பிரிட்டிஷ் அரசாங்கத்தில் பெரிய பதவிகளைப் பெறுவதற்காகவே என்று எண்ணங் கொண்டவர்கள்.

மகாத்மாவின் சகாக்களான காங்கிரஸ் தலைவர்கள் பெரும்பாலும் அப்போது சிறையில் இருந்தார்கள். தேசபந்துதாஸ், பண்டிதநேரு, லாலா லஜபதிராய், சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் போன்றவர்கள் சிறைப்பட்டிருந்தார்கள்.

இந்த நிலைமையில் பம்பாயில் சர்வ கட்சி மகாநாடு கூடிற்று. மகாத்மாவும் மகாநாட்டுக்கு வந்தார்.

மேற்படி மகாநாட்டில் ஒத்துழையாமை வாதிகள் நேர்முகமாகக் கலந்து கொள்வதில் பயனில்லை யென்று தீர்மானித்தார்கள். ஆனால் மகாநாட்டைப் பகிஷ்காரம் செய்யவேண்டியது மில்லை. அழைக்கப் பட்டவர்கள் போகலாம். அப்படிப் போகிறவர்களில் மகாத்மா காந்தி ஒருவர் மட்டும் காங்கிரஸின் சார்பாகப் பேசினால் போதுமானது. வேறு யாரும் பேசவேண்டியதில்லை.

லோகமானிய திலகருக்குப் பிறகு மகாராஷ்டிரத்தின் தலைவராக விளங்கிய ஸ்ரீ என். சி. கேல்கர் இந்த யோசனையைச் சொன்னார். அதை மற்றவர்களும் ஆதரித்

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

ரா. கி.

## 35. பம்பாய் நாடகம்

காந்தி மகாத்மாவைக் காங்கிரஸின் சர்வாதிகாரியாக நியமித்துவிட்டு ஆமதாபாத் காங்கிரஸ் கலைந்தது. இந்தியாவின் சுதந்திரப் போராட்டத்தில் பிரசித்தி பெற்ற 1921-ம் ஆண்டு முடிவுற்றது.

1922-ம் வருஷம் ஜனவரி மாதத்தில் மகாத்மாவின் உள்ளம் மூன்றுவித காரணங்களால் அலைப்புற்றுத் தத்தளிக்கும்படி நேர்ந்தது. ஒரு பக்கம் சர்க்காரின் தீவிர அடக்குமுறை; இன்னொரு பக்கத்தில் மிதவாதிகளின் சரணாகதி முயற்சி; மூன்றாவது பக்கத்தில் பொதுமக்களின் வரம்பு மீறிய செயல்கள்—இந்த மூன்றுவித எதிர்ச் சக்திகளுக்கும் ஈடு கொடுத்துக்கொண்டு காற்று மழைகளுக்குச் சலியாத மலையைப்போல் மகாத்மா நின்றார்.

ஆமதாபாத் காங்கிரஸுக்கு முன்னாலேயே பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்தார் அடக்குமுறையைக் கையாளத் தொடங்கி விட்டனர். ஏறக்குறைய இருபத்தையாயிரம் தேசபக்தர்கள் 1921-ம் வருஷ முடிவுக்குள் சிறை புகுந்துவிட்டார்கள். ஆனால் 1922-ம் வருஷம் பிறந்த பிறகு அதிகாரவர்க்கத்தார் கையாண்ட அடக்குமுறை விபரீதங்கள் அதற்கு முன் நடந்ததையெல்லாம் தூக்கி யடித்துவிட்டன. தேசத்தின் நாலா பக்கங்களி லிருந்தும் போலீஸாரின் அட்டூழியங்களைப் பற்றிய செய்திகள் வந்து கொண்டிருந்தன. இதையெல்லாம் படிக்கப் படிக்க மகாத்மாவின் எல்லையற்ற பொறுமைகூட எல்லை கடந்துவிடும் போலாகி விட்டது. "அடுத்தது துப்பாக்கிதான்!" என்ற தலைப்பில் மகாத்மா ஒரு கட்டுரை எழுதினார். இதன் கருத்து, "அடுத்தபடியாக சர்க்கார் செய்யக்கூடியது துப்பாக்கிப் பிரயோகந்தான்! ஆகையால் அதற்கு நாம் தயாரா யிருக்க வேண்டும்" என்பதுதான். அந்தக் கட்டுரையின் ஒவ்வொரு வார்த்தையும் தீயைக் கக்கியது. தபோபலம் கொண்ட முனிவருடைய வார்த்தைகள் அக்கினி மயமாக வருவது போல் காந்தி மகாத்மாவின் பேனாவிலிருந்தும் வார்த்தைகள் வந்தன.

காசியில் சில தொண்டர்களுக்கு அபராதம் விதிக்கப்பட்டது. தொண்டர்கள் அபராதம் கொடுக்க மறுத்தார்கள். அபராதத்தைப் பலாத்காரமாக வசூலிப்பதற்காகப் போலீஸார் வீடுகளில் புகுந்து சாமான்களைக் கைப்பற்றினார்கள். ஸ்திரீகள் அணிந்திருந்த ஆபரணங்களைப் பலவந்தமாகக் கவர்ந்து சென்றார்கள். இன்னும் சில இடங்களில் போலீஸார் வீடுகளில் ஜப்தி செய்யப் புகுந்தபோது தடுத்தவர்களை அடித்தார்கள். மேற்படி செய்திகளைக் குறிப்பிட்டுவிட்டு மகாத்மா எழுதியதாவது:—

"அடுத்தபடியாக அதிகாரிகள் துப்பாக்கிப் பிரயோகத்தைக் கைக்கொள்வார்கள். திக்கற்ற பாமர ஜனங்கள்மீது போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்யும் வரையில் நாம் காத்திருக்கக் கூடாது. கவர்ன்மெண்டு அதிகாரிகள் ஜனங்களின் வீடுகளில் புகுந்து கொள்ளையடித்துக்கொண்டு போவதை நம் மக்கள் பார்த்துக்கொண்டு வெகு காலம் பொறுமையா யிருப்பார்கள் என்று எதிர்பார்க்கவும் கூடாது. ஆகையால் அதிகாரிகளுடைய கோபத்தை யெல்லாம் நம்முடைய தலைமேல் நாமே இழுத்து வருவித்துக் கொள்ளவேண்டும். இதற்காக, அஹிம்சையை உறுதியாகக் கடைப்பிடித்துக்கொண்டு எவ்வளவு தீவிரமான சட்டமறுப்புச் செய்யலாமோ, அதை உடனே செய்தாகவேண்டும்.

"கவர்ன்மெண்டின் நோக்கம் என்ன? நாம் இயக்கத்தைக் கைவிட்டுச் சரணாகதி அடையவேண்டும் அல்லது பலாத்காரத்தைக் கொள்ளவேண்டும் என்பதுதான் சர்க்காருடைய நோக்கம். அவர்களுடைய வலையில் நாம் விழக்கூடாது. அதாவது, பணிந்துவிடவும் கூடாது; பலாத்காரத்தைக் கைக்கொள்ளவும் கூடாது. சாத்விக சட்டமறுப்பினால் நம்முடைய தலையில் துப்பாக்கிப் பிரயோகத்தை வருவித்துக் கொள்ளவேண்டும்.

"தொண்டர்களுடைய உறுதிமொழிப் பத்திரத்தில் 'சாவுக்கும் தயாரா யிருப்போம்' என்ற ஒரு நிபந்தனை இருக்கிறது. இந்த நிபந்தனையைக் கடைப்பிடிக்கச் சமீபத்தில் அவசியம் எதுவும் நேராது

யாராவது பெரிய வக்கீல்கள் தேவை யானால் அனுப்பி வைக்கிறேன்........."

"போதும்! போதும்! உங்கள் மதராஸ் வக்கீல்கள்! அவர்கள் வரும்போதே 'காப்பிக் கொட்டை விலை என்ன?' என்று விசாரித்துக் கொண்டு வருவார்கள்!"

"அடடா! மறந்து போனேனே? முன்னே காப்பி மார்க்கெட்டிங் போர்டு காரியதரிசியாக வேலைபார்த்த வெள்ளோடி தாங்கள் தானே?"

"வேறு யாராயிருக்க முடியும்? உலகத்திலேயே ஒரு வெள்ளோடி தான் இருக்கமுடியும்! காப்பி போர்டு காரியதரிசியா யிருந்தபோது நான் எவ்வளவு அருமையான வேலைகள் செய்து கொண்டிருந்தேன்?"

"ஞாபகம் இருக்கிறது. காப்பிக் கொட்டையின் விலையை உயர்த்துவதும் அதற்குமேலே உயர்த்துவதும் அதற்கும் மேலே உயர்த்துவதுமா யிருந்தீர்கள். அவ்வளவு உயர்ந்த தொண்டு செய்து கொண்டிருந்த தங்களை......"

"அந்த சர்தார் வல்லபாய் படேல் அநாவசியமாக இந்த ஹைதராபாத்தில் முதல் மந்திரியா யிருக்கும்படி கொண்டுவந்து தள்ளினார். இங்கே பட்டப் பகலில் 'புர்க்கா' போட்டுக் கொண்டு தப்பித்து ஓடுகிறவர்களைத் தேடுவதில் என் காலமெல்லாம் வீணாய்ப்போகிறது."

இடீரென்று ஸ்ரீ வெள்ளோடி அவர்களுக்கு என்பேரில் ஏதோ சந்தேகம் வந்து விட்டது. என்னை வெறித்து வெறித்துப் பார்த்தார்.

"என்ன பார்க்கிறீர்கள், ஸார்!" என்று கேட்டேன்.

"நீயும் இங்கே வரும்போது 'புர்க்கா' போட்டுக் கொண்டு தானே வந்தாய்?" என்று கேட்டார்.

"ஆமாம்!" என்றேன்.

"அதை எடுத்து உதறு!" என்றார்.

என் துப்பட்டியை உதறினேன்; ஒன்றும் கீழே விழவில்லை. பிறகு என் சட்டைப் பைகளை உதறிக் காட்டச் சொன்னார். என் சட்டைப் பைகளிலும் வெயிக் அலி இல்லை. பிறகு என் கையிலிருந்த பௌண்டன் பேனாவை வாங்கி அதைத் திறந்து பார்த்தார். என் பௌண்டன் பேனாவுக்குள்ளும் லெயிக் அலி இல்லை.

"போனதெல்லாம் போக; இனிமேல் அந்தமாதிரி ஒன்றும் நடக்காமல் முன் ஜாக்கிரதையாக இருங்கள்!" என்றேன்.

"இனிமேல் அவ்விதம் நடக்காதபடி பாக்கியிருந்த மாஜி மந்திரிகளை யெல்லாம் சிறையில் பிடித்து அடைத்து விட்டேனே! தெரியாதா?"

"மந்திரிகள் விஷயம் சரிதான்; ஆனால் ராஜாவின் விஷயம் என்ன!"

"நைஜாமைப் பற்றிக் கவலையில்லை. அவர் ஓடிக்கிடப் போகமாட்டார். அவர் ஓடினால் அவர் சேர்த்து வைத்திருக்கும் கோடிக் கணக்கில் பெறுமானமுள்ள தங்கக் கட்டிகள், வைரங்கள், முத்துக்கள், ரத்தினங்கள் எல்லாம் என்ன ஆகிறது?"

"முதலில் அந்தத் தங்கக் கட்டிகள், வைரங்கள், முத்துக்கள் எல்லாம் ஓடிப் போகாமல் பத்திரமா யிருக்க வேண்டுமே?" என்றேன்.

"ஆமாம்; நீ சொல்லுவதும் உண்மை தான் அந்த இன்ஸ்பெக்டர் ஜெனரல் ஜெட்லியை நம்புவதற்கில்லை. மாற்றி விட்டு, மறு காரியம் பார்க்கிறேன்; அவருக்குப் பதில் ஒரு மேனனைப் போடுகிறேன்!' என்று சொல்லிக் கொண்டே ஸ்ரீ வெள்ளோடி எழுந்திருந்து விழுந்தடித்து ஓடினார்.

வாசலில் காவல் செய்த கார்டுகள் அவரைத் தொடர்ந்து ஓடினார்கள்.

அந்த சமயம் பார்த்து நானும் அங்கிருந்து நழுவி வந்து சேர்ந்தேன்.

வர்க்கத்தின் கீர்த்திதான் என்ன ஆவது? நான் மூர்ச்சை அடைந்து விழுந்தாலும் பாதகமில்லை; அந்த ஆசாமி அகப்பட்டால் போதும்!'' என்றார் வெள்ளோடி.

"ஆசாமி அகப்படுவதற்கு ஏதாவது ஏற்பாடு நடைபெறுகிறதா? தேடுவதற்கு ஏதாவது பிரயத்தனம் நடந்து வருகிறதா?'' என்றேன்.

"பின்னே, நான் இப்போது என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்று நீ எண்ணிக் கொண்டிருக்கிறாய்?"

"தெரிய வில்லை, ஸார்!"

"லெயிக் அலியைத் தேடிக் கொண்டு தானிருக்கிறேன். இந்த மேஜையின் மேல் உள்ள பைல் கட்டுகள் உன் கண்ணில் படவில்லையா?"

"படுகிறது; ஆனால் பைல்களுக்குள் ஆளைத் தேடுகிறீர்கள் என்று தெரியாது. வெளியே எங்கேயாவது......"

"வெளியே நாலா திசையிலும் தேடுதல் நடந்து வருகிறது. அப்படித் தேடுகிறவர்கள் மணிக்கு மணி, நிமிஷத்துக்கு நிமிஷம் அனுப்புகிற அறிக்கைகள்தான் இந்த தஸ்தவேஜி பைல்கள். இந்த பைல்களை நான் ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறேன். அதாவது இந்த அறைக்குள்ளிருந்தபடியே எட்டுத் திசையும் பதினாறு கோணமும் என்னுடைய ஒற்றர்களின் கண்களின் மூலமாகத் தேடி வருகிறேன்!''

"அப்படியா? ரொம்ப சந்தோஷம்! தேடியதில் இதுவரை ஏதாவது பலன் கிடைத்திருக்கிறதா? ஏதாவது தடையம் சிக்கி யிருக்கிறதா?"

"எத்தனையோ தடையங்கள் சிக்கியிருக்கின்றன!'' என்று சொல்லி விட்டு மூதன் மந்திரி வெள்ளோடி மேஜைமீதிருந்த ஒரு சிறு கைப் பெட்டியைத் திறந்தார். அதற்குள் பல பொட்டணங்கள் இருந்தன. ஒரு பொட்டணத்தைப் பிரித்தார். அதற்குள் ஒரு சிறிய சிகரெட் துண்டு இருந்தது.

"இது லெயிக் அலி பிடித்த சிகரெட் துண்டாகத்தான் இருக்க வேண்டும் என்று தெரிகிறதா?'' என்றார்.

"தெரியவில்லை!'' என்றேன்.

"தெரியாதவனுக்குச் சொல்லியும் உபயோகமில்லை!'' என்று சொல்லி இன்னொரு பொட்டணத்தைப் பிரித்தார். அதற்குள் கொஞ்சம் செம்மண் இருந்தது.

"இது லெயிக் அலியின் காலால் மிதித்த மண்! தெரிகிறதா?'' என்றார்.

"தெரியவில்லை!'' என்றேன்.

மேலும் அவர் பொட்டணங்களைப் பிரித்தால் என்னென்ன இருக்குமோ என்ற கவலையாகி விட்டது.

"போதும்! வேண்டிய தடையங்கள் இருக்கின்றன. இந்தத் தடையங்களிலிருந்து ஏதாவது புலப்பட்டதா? அவர் எப்படிப் பிரயாணம் செய்திருப்பார் என்று தெரிந்ததா?'' என்று கேட்டேன்.

"வெகு பொல்லாத மனிதர்! நம்மை ஏமாற்றி 'டிமிக்கி' கொடுப்பதற்காக ஐவ எல்லாவித பிரயாண சாதனங்களையும் கையாண்டிருக்கிறார். கால் நடையாகவும் மோட்டார் வண்டியிலும் ரயிலிலும் ஆகாச விமானத்திலும் பிரயாணம் செய்து போயிருக்கிறார்!''

"பிரயாணம் செய்து இப்போது எங்கே போய்ச் சேர்ந்திருக்கிறார் என்று ஏதாவது புலன் தெரிந்திருக்கிறதா?''

"இப்போது எங்கே இருக்கிறார் என்பது தெரியவில்லை. ஆனால் கடைசியாக எங்கே போய்ச் சேர்வார் என்று மட்டும் எனக்கு நிச்சயமாய்த் தெரியும்.''

"எங்கே போய்ச் சேர்வார்?''

"என்னை இப்படி வயிற்றெரிச்சல் கொட்டிக் கொண்டதற்கு அவர் நரகத்துக்குத்தான் போய்ச் சேர்வார்!''

"வீணாகச் சபிக்காதீர்கள்! நம்முடைய குற்றத்துக்கு இன்னொருவரை ......''

"நம்முடைய குற்றம் என்றால் என்ன அர்த்தம்? உனக்கு இதில் ஏதேனும் சம்பந்தம் உண்டா?''

"எனக்கு ஒன்றும் சம்பந்தம் இல்லை. 'நம்முடைய' என்றால், 'உங்களுடைய' என்ற அர்த்தத்தில் சொன்னேன்.'

"என்னுடைய குற்றமா? ஒரு நாளும் இல்லை. இப்படி ஏதாவது உன் பத்திரிகையில் தாறுமாறாக எழுதி வைக்காதே! இதில் என்னுடைய குற்றம் அணுவளவும் இல்லை!''

"பின்னே யாருடைய குற்றம் என்று சொல்கிறீர்கள்?''

"வேறு யாருடைய குற்றம்? லெயிக் அலியினுடைய குற்றந்தான்! தப்பித்துக் கொண்டு போனது லெயிக் அலிதானே? ஆகையால் குற்றவாளி லெயிக் அலிதான்! உடனே லெயிக் அலி மேல் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யும்படி போலீஸுக்கு உத்திரவு போட்டு விட்டேனே, தெரியாதா?''

"ரொம்ப சரி! நல்ல வேலை செய்தீர்கள். லெயிக் அலி மேல் தப்பித்துக் கொண்டு போன குற்றத்துக்கு விடாமல் கேஸ் நடத்துங்கள். மதராஸிலிருந்து

# வெள்ளோடி பேட்டி

(நமது விசேஷ விடாக்கண்ட நிருபர்)

ஹைதராபாத் முதல் மந்திரி ஸ்ரீ எம். கே. வெள்ளோடி ஐ. ஸி. எஸ். அவர்களைப் பேட்டி காண்பது என்பது எளிதான காரியமில்லை என்று தெரிந்தது. முதன் மந்திரி வசித்த அரண்மனை வாசலில் கட்டுக்காவலும் பாராவும் வெகு பலமாக இருந்தன. பாராச் சேவகர்களை எவ்வளவோ கேட்டுப் பார்த்தும், தாவாக் கட்டையைப் பிடித்துக் கெஞ்சியும், பயன்படவில்லை. ஆகவே, கடைசி யுக்தியாக நான் யோசனை செய்துவைத்திருந்த சாதனத்தைக் கைக்கொண்டேன். நான் வழக்கமாகப் போர்த்திக் கொள்ளும் வெள்ளைத் துப்பட்டியை எடுத்து முஸ்லிம் ஸ்திரீகளின் 'புர்க்கா' மாதிரி தலையில் போட்டுக் கொண்டு ஸ்ரீ வெள்ளோடியின் மாளிகை வாசலை அடைந்ததும் காவலர்கள்—சேவகர்கள் எல்லாரும் சடசடவென்று ஒதுங்கி நின்றார்கள். பிறகு தங்கு தடையின்றி உள்ளே சென்று சாக்ஷாத் ஸ்ரீ எம். கே. வெள்ளோடி அவர்களின் எதிரில் போய் நின்றேன்.

ஸ்ரீ வெள்ளோடியின் முன்னால் இருந்த பெரிய விசாலமான மேஜையில் ஏராளமான பைல்கள் மலை மலையாகக் குவிந்து கிடந்தன. ஏறக்குறைய ஸ்ரீ வெள்ளோடியின் உருவத்தையே அவை மறைத்து விட்டன. அவருடைய முகம் மூக்குக்கு மேலே மட்டுந்தான் தெரிந்தது.

என்னைப் பர்தா உடையுடன் பார்த்ததும் ஸ்ரீ வெள்ளோடி ஒரு குதி குதித்து மூன்று துள்ளுத் துள்ளி, "ஐயோ! லெயிக் அலி! இதோ லெயிக் அலி! கார்டுகளே! ஓடிவாருங்கள்!" என்று கதறினார். ஆனால் கார்டுகளில் ஒருவராவது ஓடிவரவும் இல்லை; ஆடி வரவும் இல்லை. இதற்கு என்ன காரணம் என்று ஜன்னல் வழியாகப் பார்த்தேன். அரண்மனை வாசலில் நின்ற காவலர்கள் சடசடவென்று கீழே விழுந்து மூர்ச்சையாகிக் கொண்டிருந்தார்கள். "லெயிக் அலி" என்ற பெயர்தான் அப்படி அவர்களை மூர்ச்சை போட்டு விழச் செய்கிறது என்று தெரிந்து கொண்டேன்.

இதற்கிடையில் ஸ்ரீ வெள்ளோடி ஐ. ஸி. எஸ். ஸின் நிலை மேலும் மேலும் பரிதாபமாகிக் கொண்டிருந்தது. அவர் கத்தின கத்தலில் தொண்டை கிழிந்து விடும்போலிருந்தது. என்னைப் பார்த்து அவர் விழித்த விழிப்பில் அவருடைய கண்கள் பிதுங்கி வெளிவந்து விடும்போலிருந்தது. உடனே என் முகத்தை மூடியிருந்த துப்பட்டியை எடுத்தெறிந்தேன்.

"அப்பாடா! நீ லெயிக் அலி இல்லையா?" என்று ஸ்ரீ வெள்ளோடி ஆசனத்தில் அமர்ந்தார். கொஞ்சம் அவருடைய வியர்வையும் விறுவிறுப்பும் கிறுகிறுப்பும் அடங்கிய பிறகு என்னைப் பார்த்து, "யார் நீ? எங்கே வந்தாய்?" என்று கேட்டார்.

"நான் பத்திரிகை நிருபன்; தங்களைப் பார்க்க வந்தேன்!" என்றேன்.

"பார்த்தாகி விட்டதல்லவா? போ!" என்று சொன்னார்.

"பார்த்தாகி விட்டது; ஆனால் தங்களிடம் கேட்க வந்த விஷயத்தை இன்னும் கேட்கவில்லையே?"

"என்ன கேட்க வந்தாய்? சீக்கிரம் கேள்!" என்றார் வெள்ளோடி.

"வந்து, வந்து, ...... அந்தப் பெயரைச் சொன்னால் எங்கே பயப்படுவீர்களோ என்று பயமாயிருக்கிறது!"

"எந்தப் பெயரைச் சொன்னால் நான் பயப்படுவேன் என்று நீ பயப்படுகிறாய்?" என்று கேட்டார். அச்சமயம் டெலிபோன் மணி அடிக்கவே காதிலே ரிஸீவரை வைத்துக் கொண்டார். "ஆமாம் ... ஆமாம் ... இல்லை ... இல்லை... ஆகட்டும்!" என்று சொல்லி விட்டு ரிஸீவரைக் கீழே வைத்தார்.

"லெயிக் அலி பெயரைக் கேட்டு நான் பயப்படுவேன் என்று சொல்கிறாய்? அழகாய்த்தானிருக்கிறது! இந்த ஒரு வாரம்-பத்து நாளாக இரண்டு லட்சத்து ஐம்பதினாயிரம் தடவை அந்த மாயாவியின் பெயரைக் கேட்டு விட்டேன். இப்போது கூட டெலிபோனில் அந்தப் பெயரைச் சொல்லித்தான் யாரோ விசாரித்தார்கள். நான் கொஞ்சமாவது பயப்பட்டேனா? பெயரைக் கேட்டு நான் பயப்பட மாட்டேன். அந்தக்காலம் மலையேறி விட்டது. ஆளை நேரில் பார்த்தால் மட்டும் மூர்ச்சையடைந்து விடுவேன்!" என்றார்.

"அதெல்லாம் அப்படி யொன்றும் தங்களுக்கு நேராது! இனி எங்கே அந்த ஆளை நேரில் பார்க்கப் போகிறீர்கள்!" என்று நான் தைரியம் சொன்னேன்.

"அப்படி யொன்றும் நேராவிட்டால் என்னுடைய கதி என்ன? ஐ. ஸி. எஸ்.

ஆசை நடுத்தர வகுப்பாரை நசுக்கி வருகிறது. வர்த்தக முதலாளியின் கொள்ளை லாப ஆசை காரணமாகவே சர்க்கார் பலவிதக் கண்ட்ரோல்களை விதிக்க வேண்டியிருக்கிறது.

பொறுப்பு வாய்ந்த முதலாளிகள் அடங்கிய மேற்படி பெடரேஷன் நிறைவேற்றியிருக்கும் தீர்மானத்திற்கிணங்க, சர்க்கார் கண்ட்ரோல்களை ரத்து செய்வதாக வைத்துக் கொள்வோம். அதனால் விலை உயர்வு, பண்டங்களைப் பதுக்குதல், பிளாக் மார்க்கெட் வியாபாரம் போன்ற விபரீதமான பலன்கள் எதுவும் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளும் பொறுப்பை இந்தியா வர்த்தக, கைத்தொழில் சங்க பெடரேஷன் ஏற்றுக் கொள்ளுமா?

கண்ட்ரோல்களை அகற்றுவதுதான் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்கு இன்றியமையாதது என நம்பும் யோக்கியர்களான முதலாளிகள் இருக்கலாம். ஆனால் கண்ட்ரோல்களை ரத்து செய்வதால் ஏற்படக்கூடிய நிலைமையைக் கொள்ளை லாப ஆசை கொண்ட பிளாக் மார்க்கெட்காரர்கள் பயன் படுத்திக் கொள்ளாமல் விடுவார்களா என்பதே கேள்வி.

இதற்கு முன் ஜவுளி, காப்பிக் கொட்டை, சர்க்கரை கண்ட்ரோல்களை எடுத்ததால் ஏற்பட்ட விபரீதங்களை யாரும் மறக்கவே முடியாது.

சர்க்கரைப் பஞ்சம் ஏற்பட்டதற்கு சர்க்கரை ஸிண்டிகேட் என்ற முதலாளிகளின் குழுவே காரணம் என்பதை லவலேசமும் சந்தேகத்துக்கு இடமின்றி விசாரணை போர்டார் முடிவு செய்திருக்கிறார்கள்.

கண்ட்ரோல்களை எடுக்க வேண்டும் என்று கூக்குரலிடும் வர்த்தக முதலாளிகள் சர்க்கரை ஸிண்டிகேட் முதலாளிகளின் போக்கைப் பற்றி என்ன சொல்லுகிறார்கள்?

சுலபமாகக் கிடைக்கக்கூடிய விறகை எடுத்துக் கொள்ளுவோம். விறகு கண்ட்ரோல் ரத்தானதிலிருந்து அதன் விலை ஐம்பது சத விகிதத்துக்கு மேல் அதிகமாகியிருக்கிறது.

இவ்விதமே வாழ்க்கைக்கு முக்கியமான ஒவ்வொரு சாதனத்தின் விலையும் விபரீதமாக உயர்ந்து. நடுத்தர வகுப்பார் திக்கு முக்காடி வருகிறார்கள்.

விலைவாசிகளின் உயர்வினால் அதிகமாகப் பாதிக்கப்படுவோர் நடுத்தர வகுப்பார் என்பது தெரிந்திருந்தும், அவர்களுடைய நலனுக்காகக் கண்ட்ரோல்களை, சாமான்களின் விலைகளை ஓரளவாவது கட்டுப்படுத்தும் கண்ட்ரோல்களை அடியோடு எடுத்துவிட வேண்டும் என்று முதலாளிகள் ஓலமிடுவது ஆடு நனைகிறதே என்று ஓநாய் அழுத கதையாக இருக்கிறது!

ஆகையால் நடுத்தர வகுப்பாரின் நலனைக் கருதிக் கண்ட்ரோல்களை எடுக்க வேண்டும் என்று சொல்லும் வர்த்தக முதலாளிகள் கண்ட்ரோல்களை எடுத்தால் மார்க்கெட்டில் பொருள்களின் விலை உயராது என்பதற்கு உத்தரவாதம் கொடுக்க வேண்டும். வர்த்தக சமூகத்தில் அத்தகைய தர்மமான கட்டுப் பாட்டை அவர்கள் முதலில் நிலைநாட்டிக் கொள்ள வேண்டும். அமிதலாப ஆசைக்கு ஆளாகி அதிக விலைக்குச் சாமான்களை விற்கும் வர்த்தகர்களை வர்த்தக சமூகத்திலிருந்து பகிஷ்காரம் செய்து புத்தி கற்பிக்க வர்த்தக பெடரேஷன்கள் முன் வரவேண்டும்.

இவ்விதம் வர்த்தக முதலாளிகள் வாக்குறுதி கொடுப்பார்களானால் இந்திய சர்க்கார் கண்ட்ரோல்களை எடுப்பது பற்றி யோசித்துச் சாதகமாக முடிவு செய்யலாம்.

* * *

இந்திய சர்க்காரும் இந்திய சர்க்காரை நடத்தும் மாபெரும் தலைவர்களும் நடுத்தர வகுப்பாரை அநாதைகளாக விட்டுவிடக் கூடாது என்பதை மறுபடியும் வற்புறுத்துகிறோம்.

மத்திய வகுப்பாரைப் பார்த்து நம் தலைவர்கள் "நீங்கள் கஷ்டப்படுகிறீர்கள்; எத்தனையோ தியாகங்களைச் செய்திருக்கிறீர்கள்; நீங்கள் தேச பக்தர்கள்; ஆகையால் இன்னும் கஷ்டப்படுங்கள், இன்னும் தியாகம் செய்யுங்கள்!" என்று எப்போதுமே உபதேசம் செய்து கொண்டிருப்பதில் பயனில்லை. இந்தியா சுதந்திரம் அடைந்ததின் பயனை நடுத்தர வகுப்பாரும் ஓரளவேனும் அடைந்து அநுபவிக்கும்படி செய்ய வேண்டும்.

'தொழில் பெருக்கம்' 'செல்வப் பெருக்கம்' என்ற பெயரால் முதலாளிகளுக்கும் பணக்காரர்களுக்குமே எல்லா வசதிகளையும் செய்து கொடுத்துக் கொண்டு நாட்டில் பெரும்பாலோராகிய நடுத்தர வகுப்பாரையும் விவசாயிகள் - குடியானவர்களையும் அலட்சியம் செய்யக்கூடாது.

நடுத்தர வகுப்பாரின் கஷ்டம் குறைவதற்கான முறைகள் எதையும் சர்க்கார் சமீப காலத்தில் கைக் கொள்ளவில்லை. இந்த மாதம் இந்திய சர்க்கார் நிதிமந்திரி சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டத்தில் நடுத்தர வகுப்பாருக்குப் பரிகாரம் அளிக்கக் கூடிய அம்சம் எதுவுமில்லை.

இந்த நிலைமையில் நமது வர்த்தகப் பிரதிநிதிகளும் முதலாளி வர்க்கத்தின் பிரதிநிதிகளும் நடுத்தர வகுப்பாரின் பரிதாபமான நிலைமைக்குப் பரிந்து கண்ணீர் வடிக்க முன் வந்திருப்பது ஒரு வேடிக்கையாகும்.

• • •

புது டில்லியிலே நடந்த அகில இந்தியா உற்பத்தியாளர் மகாநாட்டுக்குத் தலைமை வகித்த டாக்டர் அழகப்ப செட்டியார், நடுத்தர வகுப்பாருக்காக மனம் உருகிப் பேசினார்.

"இந்தியாவின் கைத்தொழில் முன்னேற்றத்தில் முக்கிய பங்கு எடுத்து வருவோர் மத்தியதர வகுப்பார்தான். எனவே, அவர்களுடைய கஷ்டங்கள் தீருவதற்குற்ற முறைகளைக் கைக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியம். அவர்களுக்குப் பரிகாரம் அளித்தால் தொழில் துறைகளில் மூலதனம் தானாக வந்து விழும். இன்றையப் பொருளாதார நெருக்கடியின் முக்கிய காரணம் நடுத்தர வகுப்பாரின் நிதி நிலைமை சீர்கெட்டு இருப்பதேயாகும்" என்று டாக்டர் அழகப்ப செட்டியார் சர்க்காரின் கடமையை வற்புறுத்தினார்.

இது மாத்திரமா? "நடுத்தர வகுப்பாரின் கஷ்டங்கள் குறைய வேண்டுமானால், கண்ட்ரோல்களை யெல்லாம் சர்க்கார் ரத்து செய்துவிட வேண்டும்" என்று இந்திய வர்த்தக, கைத்தொழில் சங்க பெடரேஷனின் இருபத்து மூன்றாவது வருடாந்திர மகாநாட்டில் ஒரு தீர்மானம் வந்தது. இதை ஆதரித்து ஸர். புருஷோத்தமதாஸ் தாகூர் தாஸ், லாலா ஸ்ரீ ராம், ஸ்ரீ ஜயந்தி லால் ஷா முதலியவர்கள் பேசும்போது நடுத்தர வகுப்பாரின் கஷ்டங்களை உருக்கமாக விவரித்தார்கள்.

"கண்ட்ரோல்கள் ஒவ்வொரு மாகாணத்திலும் பதினாயிரக் கணக்கான குடும்பங்களின் ஜீவனத்தைப் பாழாக்கியிருக்கின்றன" என்று ஸர் புருஷோத்தம தாஸ் தாகூர்தாஸ் குறிப்பிட்டார்.

இந்திய சர்க்காரின் 1950-51-ம் வருஷத்திய வரவு செலவுத் திட்டத்தைப் பற்றி அவர் அபிப்பிராயம் தெரிவித்தபோது தாம் முதலாளி வர்க்கத்தின் பிரதிநிதியல்ல, மத்தியதர வகுப்பாரின் பிரதிநிதி என்று எல்லோருக்கும் தோன்றும்படி பேசினார்.

"மத்திய வகுப்பாருக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கக்கூடிய அம்சம் ஒன்றும் வரவு செலவுத் திட்டத்தில் இல்லை. அவர்களுடைய கஷ்டங்கள் நாளுக்கு நாள் அதிகமாகி வந்தும் கூட, அவற்றை நிவர்த்திப்பதற்கான வழியைத் தேடாமல் அவர்களைச் சர்க்கார் ஏன் இப்படி அலட்சியம் செய்து விட்டார்களோ, தெரியவில்லை. எனவே, மத்திய வகுப்பாரின் கஷ்டங்களுக்குப் பரிகாரமாக சர்க்கார் உருவான முறையில் ஏதாவது செய்து தீரவேண்டும்" என்று ஸர் புருஷோத்தமதாஸ் தாகூர் தாஸ் வற்புறுத்திக் கூறினார்.

"மத்திய வகுப்பார் எப்போதுமே சிறந்த தேச பக்தர்கள். நம் நாடு சுதந்திரம் பெறுவதற்காக அவர்கள் பாடுபட்டார்கள். அவர்களைத் தேசத்தின் மூளை என்று சொல்லவேண்டும். நம் தேசத்தில் உற்பத்தியாகும் சாமான்களில் பெரும் பகுதியையும் அவர்கள் தான் வாங்குகிறார்கள். கண்ட்ரோல்கள் அவர்களுடைய வாழ்வையே கெடுத்து விட்டன" என்று லாலா ஸ்ரீ ராம் கண்ணீர் விட்டுக் கூறினார்.

"நம் நாட்டில் அமைதியும் பாதுகாப்பும் ஏற்பட வேண்டுமானால், மத்திய வகுப்பாரின் குறைகளைத் தீர்க்க சர்க்கார் தீவிர முயற்சி செய்ய வேண்டும். வாழ்க்கைக்கு இன்றியமையாத பண்டங்களுக்கு விதிக்கப்பட்டுள்ள விற்பனை வரிகளை ரத்து செய்வதால் அவர்களுடைய கஷ்டங்கள் ஓரளவு குறையலாம். மத்திய வகுப்பார் அறிவுக் களஞ்சியம் போன்றவர்கள். நாட்டின் முதுகெலும்பு அவர்களே" என்று ஸ்ரீ ஜயந்தி லால் ஷா பரிந்து பேசினார்.

பெடரேஷன் மகாநாட்டில் பேசிய மற்றும் பல முதலாளிகளும் 'மத்திய வகுப்பாரின் கஷ்டம் தீர கண்ட்ரோல்கள் ஒழிய வேண்டும்' என்ற பல்லவியைப் பாடித் தீர்த்தார்கள்.

• • •

நடுத்தர வகுப்பாரின் கஷ்டங்களுக்கு நம் சுதந்திர சர்க்காரின் காரியங்களைக் காட்டிலும் முதலாளிகள்—வர்த்தகப் பிரமுகர்களின் காரியங்களே அதிக காரணம் என்பதை நாம் இங்கே எடுத்துக் காட்ட விரும்புகிறோம்.

சர்க்காருடைய வரிகளைக் காட்டிலும் வர்த்தக முதலாளியின் கொள்ளை லாப

# அநாதைகள் யார்?

அம்பரீஷ சக்கரவர்த்தி யாகம் செய்து கொண்டிருந்த போது ஒரு பெரிய தவறு நேர்ந்து விட்டது.

அந்தத் தவறுக்குப் பிராயச் சித்தமாக நரபலி கொடுக்க வேண்டும் என்று கூறினார்கள்.

சக்கரவர்த்தியின் ராஜ்யத்தைச் சேர்ந்த ஏழை ஒருவருக்கு மூன்று பிள்ளைகள் இருந்தனர்.

அம்பரீஷனின் ஆட்கள் அந்த ஏழையிடம் சென்று அவருக்கு ஏராளமான தொகை கொடுத்து, மூன்று பிள்ளைகளில் ஒருவனைப் பலிபீடத்துக்கு அர்ப்பணம் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார்கள்.

தகப்பனார் மூத்த பிள்ளையைக் கொடுக்க முடியாது என்று சொல்லி விட்டார்; தாயார் கடைசிப் பிள்ளையைக் கொடுக்க மறுத்து விட்டாள்.

எனவே, நடுப் பிள்ளையாண்டான் தாய் தந்தையரால் கைவிடப்பட்ட அநாதையானான்!

அவனைச் சக்கரவர்த்தியின் ஆட்கள் அழைத்துக் கொண்டு சென்றார்கள்.

அவன் பலியாகாமல் விசுவாமித்திர மகரிஷியினால் காப்பாற்றப்பட்டான் என்பது பழைய கதை.

இன்று சுதந்திர இந்தியாவில் நடுத்தர வகுப்பார் மேலே கதையில் கூறிய நடுப் பிள்ளையின் கதியையே அடைந்திருக்கிறார்கள்.

முதலாளிகள் அகட விகட சாமர்த்தியம் பொருந்தியவர்கள்; அரசாங்கத்தையும் ஆட்டி வைக்கும் வல்லமை படைத்தவர்கள்; நிர்த்தாட்சண்யமான இரும்பு மனுஷர் சர்தார் பட்டேல்கூட தங்களிடம் நயமாகவும் நளினமாகவும் பேசும்படி செய்து கொண்டிருப்பவர்கள்; தாங்கள் ஜனங்கள் மீது சுமத்தியுள்ள பளுவைக் குறைக்காவிட்டாலும் தங்கள் மீது சர்க்கார் சுமத்தியுள்ள வரிப் பளுவைக் குறைப்பதில் வெற்றி பெற்று விடுகிறார்கள்.

அத்தகைய சக்தி பொருந்தியவர்களை அநாதைகள் என்று சொல்ல முடியுமா? முடியாது.

விலைவாசிகளின் உயர்வுக்குத் தகுந்தவாறு ஏழைத் தொழிலாளரின் சம்பளம் ஓரளவு உயர்ந்திருக்கிறது. அவர்களின் சார்பில் பேசுவதற்குத் தொழிலாளர் சங்கங்கள் இருக்கின்றன. அவர்களுக்காகப் பரிந்து கொண்டு உண்ணாவிரதம் அனுஷ்டிப்பதற்கு சோஷலிஸ்ட் தலைவர்களும் இருக்கிறார்கள். இன்னும் கடுமையான பயங்கரமான முறைகளையும் தொழிலாளரின் பெயரால் கையாளுவதற்கு வேறு சிலர் இருக்கிறார்கள்.

இந்தியாவில் தொழிலாளிகளின் நிலைமையைப் பற்றித் தப்பான விவரங்களை வைத்துக் கொண்டு பேசுவதற்குச் சர்வதேசத் தொழிலாளர் சங்கங்கள் வேறு இருக்கின்றன.

தொழிலாளர்களுக்கு நீதி வழங்க வேண்டும் என்பதில் மத்திய வகுப்பார் உள்பட பொது மக்கள் யாவரும் அக்கறை கொண்டிருக்கிறார்கள்.

ஆகையால், தொழிலாளர்களையும் அநாதைகள் என்று சொல்வதற்கில்லை.

அப்படியானால் யார் அநாதைகள்? சர்க்காரை ஆட்டிவைக்கும் முதலாளிகளும் அல்ல, சர்க்காரிடமிருந்து சலுகைகளைப் பெறும் சக்தி பொருந்திய தொழிலாளர்களும் அல்ல. இரண்டும் கெட்டான் பேர்வழிகளான நடுத்தர வகுப்பார்தான்.

தற்போதைய விலைவாசிகளின் உயர்வுக்குத் தகுந்தாற்போல் நடுத்தர வகுப்பாரின் வருமானம் உயரவில்லை. சர்க்கார் விதிக்கும் புதிய வரிகள் பெரும்பாலும் நடுத்தர வகுப்பாரையே பாதிக்கின்றன. முதலாளிகளின் மாயாஜால வேலைகளும் பிளாக் மார்க்கெட்காரர்களின் பாதகமான காரியங்களும் நடுத்தர வகுப்பாரையே அதிகமாக நசுக்கிப் பிழிகின்றன.

இந்த உண்மையைச் சிறிது காலமாக நம் சுதந்திர சர்க்காரை நடத்தும் மாபெருந் தலைவர்கள் உணர்ந்து வருவதாகத் தெரிகிறது. பண்டித ஜவாஹர்லால் நேரு, சர்தார் பட்டேல் முதலியவர்கள் நடுத்தர வகுப்பாரின் நிலையைக் குறித்துத் தங்கள் அநுதாபத்தைத் தெரிவித்திருக்கிறார்கள்.

அநுதாபத்தைத் தெரிவித்திருக்கிறார்களே தவிர அந்த அநுதாபத்தைக் காரியத்தில் இது வரையில் காட்டவில்லை.

# கனவில் நடந்தவை!
















சென்னை மந்திரிகள் மீது ஸ்ரீ டி. பிரகாசம் கொடுத்த புகாரை மேலிடத்தார் நிராகரித்து விட்டனர். ஆயினும் ஸ்ரீ பிரகாசம் போரை நிறுத்தவில்லை!

இந்த நாட்டின் மக்களுக்குப் பிரயோஜன கரமாக இருந்து வரும் அல்லவா?

கோடிக்கணக்கான ரூபாய் செலவில் பைக்காரா, மேட்டூர் மின்சாரத் திட்டங்கள் உருவானபோது, அவற்றைச் சிலர் கண்டித்தார்கள். கோடி கோடியாக செல்வத்தை இப்படிக் கொண்டு போய்ப் பள்ளத்தில் கொட்டலாமா என்று கேட்டார்கள். ஆனால் இப்போது அந்தத் திட்டங்களால் சென்னை மாகாணம் அடைந்துவரும் பலனை அளவிட்டுச் சொல்ல முடியாது.

## புகழ்பெற்ற புள்ளி விவரங்கள்

சென்னை அசெம்பிளியில் மந்திரிகளை எப்பொழுதும் கண்டிக்கும் சில அங்கத்தினர்கள்கூட மராமத்து மந்திரி கனம் பக்தவத்சலத்தை ஏகமனதாகப் பாராட்டினார்கள் என்றால் அது விசேஷமான காரியம் அல்லவா? சென்னையில் காங்கிரஸ் சர்க்கார் ஏற்பட்டு இன்னும் ஐந்து ஆண்டுகள்கூடப் பூர்த்தியாக வில்லை. அதற்குள் சர்க்கார் சாதித்துள்ள காரியங்களை மராமத்து மந்திரி புள்ளி விவரங்களுடன் எடுத்துக் காட்டியதால் அங்கத்தினர்கள் அவரைப் புகழ்ந்து பாராட்டினார்கள். மொத்தம் முப்பது கோடி ரூபாய் செலவில் சர்க்கார் கைக்கொண்டுள்ள பல்வேறு மின்சாரத் திட்டங்களைப்பற்றியும் கனம் மந்திரி குறிப்பிட்டார். அவை வெறும் ஏட்டுத் திட்டங்கள் அல்ல; இன்னும் இரண்டொரு வருஷங்களில் பூர்த்தியாகிப் பலனைக் கொடுக்கக்கூடிய திட்டங்கள் ஆகும்.

மின்சார வசதி சம்பந்தப்பட்ட வரையில் இந்தியாவிலேயே சென்னை மாகாணம்தான் முதல் ஸ்தானத்தை வகித்து வருகிறது என்பது பெருமைப்பட வேண்டிய காரியம். உதாரணமாக 1946-ம் வருஷத்தில் இந்த மாகாணத்தைச் சேர்ந்த 101 கிராமங்களுக்கு மின்சார வசதி அளிக்கப்பட்டது. ஆனால் இன்று 1,700 கிராமங்களில் மின்சார வசதி ஏற்பட்டிருக்கிறது. இந்த நிலைமை நாளுக்கு நாள் அபிவிருத்தியடைந்து வருவதால் இன்னும் சில வருஷங்களில் இந்த மாகாணத்திலுள்ள எல்லா கிராமங்களிலும் மின்சார விளக்குகள் ஜொலித்துக் கொண்டிருக்கும்.

பாபநாசம், மேட்டூர் நீர்த் தேக்கங்கள் பாசனத்துக்காக ஏற்பட்டவை யல்ல. அப்படியிருந்தும் கூட தாம்ரபர்ணி பிராந்தியத்தில் மழையின்றிப் பயிர்கள் பாழாய்ப் போய்விடும் என்ற நிலைமை ஏற்பட்டபோது மேற்படி தேக்கங்களிலிருந்த தண்ணீரைக் கொண்டுதான் பயிர்களைக் காப்பாற்ற முடிந்தது.

மேலே குறிப்பிட்டவைகளைத் தவிர ஏழு கோடி ரூபாய் செலவில் மூந்நூறு சில்லறை நீர்ப்பாசனத் திட்டங்களையும், முப்பது கோடி ரூபாய் செலவில் இருபத்துமூன்று நீர்ப்பாசனத் திட்டங்களையும் சென்னை சர்க்கார் கைக்கொண்டு நிறைவேற்றி வருகிறார்கள்.

இந்த மாகாணத்தில் சரிபாதி நீர்ப்பாசனம் குளங்களின் மூலம் நடைபெறுகிறது. முப்பத்தையாயிரம் குளங்களில் பெய்யும் மழையைக் கொண்டு சரிபாதி நிலங்களுக்குத் தண்ணீர் பாய்ச்சுகிறார்கள் என்றால் அது எவ்வளவு மகத்தான சாதனை என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. பத்து கோடி ரூபாய் செலவில் அந்தக் குளங்களை அபிவிருத்தி செய்வதற்கான திட்டங்களை வகுத்திருக்கிறார்கள்.

## கிராமங்களுக்குக் கதிமோட்சம்

இருபத்தைந்து வருஷங்களில் எழுபத்தைந்து கோடி ரூபாய் செலவு செய்து இந்த மாகாணத்திலுள்ள பெரும்பாலான கிராமங்களிலும் ரஸ்தா வசதி ஏற்படுவதற்கான திட்டங்களையும் தயாரித்திருக்கிறார்கள். தற்போது இந்த மாகாணத்தில் மொத்தம் 37,000 மைல் நீளமுள்ள ரஸ்தாக்கள் இருக்கின்றன. எனினும் ஏராளமான கிராமங்கள் ரஸ்தாக்கள் என்றால் என்ன என்பதையே அறியாமல் இருக்கின்றன. அதிலும் மழை காலத்தில் அவைகள் போக்குவரத்துக்கு வழியின்றிப் படும் கஷ்டம் சொல்லி முடியாது. ரஸ்தா இணைப்பே இல்லாமல் வரப்பு, வயல், வாய்க்கால்களைக் கடந்து செல்லவேண்டிய கிராமங்கள் எத்தனையோ இருக்கின்றன என்பதைக் கவனிப்பவர்கள் கிராமப் பிராந்தியங்களில் ரஸ்தா நிர்மாணத் திட்டத்தின் முக்கியத்தை உணர்ந்து கொள்ளலாம்.

இத்தனை சிறந்த திட்டங்களை வகுத்துள்ள சென்னை மாகாண இஞ்சினீயர்களின் ஊழியத்தையும், அவர்களுக்குப் பக்கபலமாக இருந்து அந்தத் திட்டங்களை நிறைவேற்றி வரும் மந்திரி கனம் பக்தவத்சலத்தின் பெரு முயற்சியையும் சென்னை அசெம்பிளி அங்கத்தினர்கள் மாத்திரமின்றி சென்னை மாகாண மகா ஜனங்கள் யாவருமே பாராட்டுவார்கள். மேற்கூறிய திட்டங்கள் எல்லாம் காரியத்தில் எப்படி நிறைவேறி வருகின்றன என்பதை மூன்று மாதத்துக்கு ஒரு தடவை பொது ஜனங்களுக்கு அறிவித்து வந்தால் மிகவும் நலமாயிருக்கும்.



மலர் 9

தமிழ்த் திருநாடு தன்னைப் - பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

இதழ் 33

# என்ன சேதி?

## யாருக்கு அதிர்ஷ்டம்?

சென்னைச் சட்ட சபையைச் சேர்ந்த காங்கிரஸ் கட்சியின் நிர்வாக சபைத் தேர்தல் நாளை நடைபெறப் போகிறது. சென்ற மூன்று வருஷங்களாக இந்தச் சுபதினம் நெருங்கும்போது இம்மாகாணத்தின் அரசியலைத் தாபஜ்ஜுரம் பிடித்துக் கொள்வது வழக்கம். கட்சித் தலைவரே பிரதமராகையால், தலைமைப் பதவியில் உள்ளவரை மாற்றி வேறொருவரைத் தேர்ந்தெடுப்பது பற்றி ஆலோசனைகளும் சதியாலோசனைகளும் நடைபெறும். யார் தலைவராக அதாவது பிரதம மந்திரியாக வரக்கூடும் என்பது பற்றி எங்கே பார்த்தாலும் பேசப்படும்; பலவித ஜோஸ்யங்கள் வெளியாகும்; பலருடைய பெயர்கள் அடிபடும்; பலருடைய வன்னல்களும் வண்டவாளங்களும் உண்மையாகவோ கற்பனையாகவோ வெளிப்பட்டுக் கொண்டிருக்கும். மொத்தத்தில் மாகாண அரசியல் குட்டை குழம்பிச் சேறாகி நாற்றமும் எடுத்துப் போகும்.

வருஷத்துக்கு ஒரு தடவை காங்கிரஸ் கட்சியின் தலைவரைத் தேர்ந்தெடுப்பது என்ற ஏற்பாட்டினாலேதான் மேற்கூறிய அமர்க்களங்கள் நடைபெற்று வந்தன. அதிர்ஷ்ட வசமாக அந்த ஏற்பாட்டை மாற்றிவிட்டார்கள். கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்படுகிறவர் மூன்று வருஷத்துக்கு அந்தப் பதவியை வகிப்பார் என்று செய்துவிட்டார்கள். கனம் பி. எஸ். குமாரசாமி ராஜா முதல் மந்திரியான பிறகு, அவர் முதல் மந்திரியான முதல் வருஷத்திலேயே, இந்த ஏற்பாடு அமுலுக்கு வந்துவிட்டது. இது ஒரு பெரும் அதிர்ஷ்டம் என்பதில் சந்தேகமில்லை. இது கனம் குமாரசாமி ராஜாவின் அதிர்ஷ்டமா, அல்லது சென்னை மாகாணத்தின் அதிர்ஷ்டமா என்று கேட்டால், இரண்டு பேருடைய அதிர்ஷ்டமுந்தான். ஆனால் ஸ்ரீ குமாரசாமி ராஜாவின் அதிர்ஷ்டத்தைக் காட்டிலும் மாகாணத்தின் அதிர்ஷ்டமே அதிகம் என்று சொல்லவேண்டும். ஆகையால் நாளைய தினம் நடக்கப் போகும் நிர்வாகசபைத் தேர்தல் எவ்வித களேபரமும் இன்றி, சூழ்ச்சிகள் சதியாலோசனைகள் இன்றி, அமைதியாக நடைபெறும் என்று எதிர்பார்க்கலாம்.

கனம் குமாரசாமி ராஜா தம்முடைய அதிர்ஷ்டத்தையும் மாகாணத்தின் அதிர்ஷ்டத்தையும் நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். அரசியல் நிர்வாகத்தில் சென்னை மாகாணம் முன்னொரு சமயம் அடைந்திருந்த நல்ல பெயரை மறுபடியும் அவருடைய காலத்தில் நிலைநாட்ட வேண்டும்.

## மதிப்பிட முடியுமா?

பாரத நாடு சுதந்திரம் பெறுவதற்காக எவ்வளவோ வருஷ காலம் எத்தனையோ தலைவர்களும் தொண்டர்களும் சர்வ பரித்தியாகம் செய்தார்கள். அவர்களுடைய தியாகம் இவ்வளவு பெறும் என்று மதிப்பிட முடியுமா? நமது நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டுள்ள இராணுவ வீரர்களின் ஊழியம் இவ்வளவு பெறும் என்று மதிப்பிட முடியுமா? அதுபோலவே நமது தேசத்தின் எதிர்கால சுபிட்சத்துக்காகப் பல பல சிறந்த திட்டங்களைத் தயாரித்து அவற்றை நிறைவேற்றிவரும் இஞ்ஜினியர்களின் ஊழியத்தையும் மதிப்பிட முடியாது. அவர்களால் உருவாக்கப்படும் நீர்ப்பாசன, மின்சாரத் திட்டங்களால் வாழையடி வாழையாக எத்தனை கோடி மக்கள் பலனடையப் போகிறார்கள்? ஐந்து, பத்து வருஷங்களில் பூர்த்தி பெறும் திட்டங்கள் ஐந்நூறு, ஆயிரம் வருஷகாலம் வரையில்

# கல்கி

## பொருளடக்கம்


மலர் 9 இதழ் 33 | மார்ச் 19 | விரோதி வருஷம் பங்குனி 6உ.




*"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.*

மார்ச்
18உ
முதல்

# விஜய குமாரி

விழியாலே மொழிபேசும் நடிப்பு,
உள்ளத்தை உருவகப்படுத்தும் நடனங்கள்,
சொல்லமைப்பால் சுவைபயக்கும்
பாடல்கள், அனைத்தும் ஒன்றிய கற்பனை
கன்றுத திரைச் சித்திரம்......

டைரக்ஷன்: ஏ.எஸ்.ஏ.சாமி



ஜூபிடர் தயாரிப்பு
ஸ்டூடியோ சென்ட்ரல்

**25 - 3 - 50 சனிக்கிழமை முதல்**

சென்னை பிரபாத், கெயிட்டி & சரஸ்வதியில் மகத்தான ஆரம்பம்!

# பொது மக்களின் சோப்பு

## தனவந்தருக்கும் இன்பமளிப்பது

பரிபக்குவமடைந்து முப்பது வருஷங்களுக்கு அதிகமான கோத்ரேஜின் ஆராய்ச்சியும்—முதன் முதலாக தாவர எண்ணெய் சோப்புக்களில் நுண்ணிய ஆராய்ச்சியாளரும் தயாரிப்பவர்களுடையதுமான — இந்த பிரசித்தி பெற்ற சாவி மார்க் டாய்லெட் ('ஸ்நான) சோப், இனிமையான மணமூட்டப்பட்டு, எளியவர்களின் பண நிலைமைக்கும் ஏற்றவாறு சாமானிய மனிதனுக்கும் தன்னையும் தன் குடும்பத்தையும் சுத்தமாயும் ஆரோக்யமாயும் வைத்துக்கொள்வதை ஓர் இன்பமயமாக்குகிறது.

நூற்றுக்கு நூறு பங்கு பரிசுத்தமானது. எடையை அதிகரிக்கச் செய்யும். எவ்விதமான கலப்படமும் இல்லாதது.

உங்களில் ஒவ்வொருவரும் இன்றே ஒரு பெட்டியை வாங்கி சிக்கனே திருப்தியைக் காணுங்கள்.




ஒரு டஜன் 'தந்த நிற' கட்டிகளுக்கு
ரூ. 3-4
(வரி [illegible])

# கோத்ரெஜ் டர்க்கிஷ் பாத்

100 சதம் தூய்மைக்கும்
மிருகக் கொழுப்பற்றதென்
பதற்கும் உத்திரவாதமானது

கோத்ரெஜ் சோப்ஸ், லிமிடெட்.
மதராஸ்: 164, பிராட்வே,
கொச்சின்: 6/36, கல்கத்தா.

